# வள்ளல் அழகப்பர்



''பல்துறைச் செந்நாப் பாவலர்''

கவிஞர் அரு. சோமசுந்தரன்,

M. A., B. T..

பொன்முடி பதிப்பகம்

தேவகோட்டை :: இராமநாதபுர மாவட்டம்

# முன்னுரை

வள்ளல் அழகப்பர் இருபதாம் நூற்றுண்டு கண்ட இணையற்ற வள்ளலாவார். அவர் கோடிக் கணக்காகப் பொருளீட்டிக் குடியிருந்த வீட்டை யும் கொடைகொடுத்த சிறப்புக் குரியவர். முன்னுட் பாரியும் பின்னுட் பச்சையப்பரும் இணைந்த புதுப் பிறவியே அழகப்பர் என்ருல் மிகையாகாது. இல்லை என்னுது கொடுத்ததால் அவர் பாரி! கல்விக்கு வழங்கியதால் அவர் பச்சையப்பர்! சுதந்திர நாட்டுக்குப் புதுவழி காட்டிய சோர்விலா மேதையாகியவள்ளல் அழகப்பரின் வாழ்க்கை வரலாற்றை நாடு உணரவேண்டும் என்ற நல்லெண்ணத்தால் இந்நூலை எழுதத் தலைப்பட்டேன். அவரைப் பற்றிக் 'கொடை விளக்கு'' என்னும் தலைப்பில் கவிதை நூல் யாத்தார் பேராசிரியர் திரு. டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள். வள்ளலைப் பற்றிக் கவிஞர் பிறர் பாடிய பாடல்கள் அழிதலாகாது என்ற எண்ணத்தால் இயன்ற வரை கிடைத்த பாடல்களை இதில் இணைத்துள்ளேன்.

வள்ளலின் கல்லூரியில் கல்வி கற்றவன் நான். வள்ளலின் அன்புக்கும் ஆசிமொழிகட்கும் பாத்திரமானவன் நான். 1955—57 ஆண்டுகளில் நான் அழகப்பா கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் பயின்ற

பொழுது கல்லூரிப் பேச்சாளனாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றுப் பல்கலைக்கழகப் பேச்சுப் போட்டிக்குப் பன்முறை அனுப்பப் பெற்றுப் பாராட்டப் பெற்றேன். அப்பொழுது அழகப்பர் சென்னையில் என்னை அவரது வேப்பேரி இல்லத்தில் வரவேற்று வாழ்த்திய காட்சி இன்னும் என் கண்முன் நிலவுகிறது. அவரது ஆசியால் தான் இன்று நான் இலக்கிய உலகில் இடம் பெற்றிருக்கிறேன் என்று உணர்கிறேன். என் அறிவுக் கண்ணைத் திறந்த வள்ளலுக்கு அஞ்சலி செலுத்தும் முறையில் நன்றிக் காணிக்கையாக இந்நூலைத் தமிழுலகிற்குப் படைக்கிறேன்.

அன்புசால்,

காரைக்குடி
1—7—67

அரு. சோமசுந்தரன்

# அணிந்துரை

பேராசிரியர் — காதிர்முகையதீன் கல்லூரி
திரு நா. அப்துல்கபூர் — அதிராம்பட்டினம்
எம். ஏ. — தஞ்சை மாவட்டம்

அருங்குண அழகன் தமிழகம் தலைகொண்டு போற்றும் நிலையான வள்ளல்களுள் ஒருவன். வியனுலகு வியக்க வான்கொடைகள் வழங்கி மேம்பாடுற்ற மாண்புடையோன். "ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது ஊதியமில்லை உயிர்க்கு" என்னும் தெள்ளுதமிழ் வள்ளுவனின் இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்பவன். "மன்னு உலகத்து மன்னுதல் குறித்தோர் தம்புகழ் நிறீஇத்தாம் மாய்ந்தனரே" என்னும் புறபாட்டடி கட்குப் பொருத்தமான எடுத்துக் காட்டாக அமைந்தவன்.

கலைக்குடியாகிய காரைக்குடியில் அடியெடுத்து வைப்போர் கலவிக் குடியைக் கண்டு களிப்படையாமல் இருக்க இயலாது. அறக் கொடைகளிற் சிறந்த அழகனின் அறிவுக் கொடை ஆங்கு வானளாவி நின்று வான்புகழ் பாடும்.

அந்தப் பாட்டெல்லாம் இந்த நூலில் பரிமளிக்கக் காண்கிறோம். வள்ளலின் வரலாறு இந்நூலில் வரன் முறையாக எழுதப் பெற்றுள்ளது.

அன்புக் கவிஞர் பலர் அருங்குண அழகனின் பல் துறைச் சிறப்புக்களைப் பாநலங் கனிய ஆர்வம்ததும்பப் பாடி மகிழ்கின்றனர். அழகன் செழுங்கலையைத் தாங்குதற்கு வழங்கிய சிறப்புக்களைக் கவிஞர் கூத்தரசன்

கொடை நின்று வளரும்! பல தலைமுறையைச் செழிக்கச் செய்யும். இத்தகைய சிறந்த வள்ளலைப் போற்றுதற்கும் கவிஞர்கள் வேண்டும். கவிஞர்கள் வள்ளல் அழகப்பரைப் பாராட்டுகின்றனர் – போற்றுகின்றனர்– புகழ்கின்றனர்–புகழ்பெறுகின்றர்.

கவிஞர் சோமசுந்தரன் இளம் தமிழ் உலகத்தைச் சார்ந்தவர். நல்ல கவிஞர் அவர் வள்ளல் அழகப்பர் புகழ் பேசுவதன் மூலம் கபிலரை நினைவூட்டுகின்ருர். சிறந்த முயற்சி! தமிழர்கள் பாராட்டிப் பயன்கொள்ள வேண்டிய ஒன்று.

தெய்வசிகாமணி

*15—3—67*

# 1. முன்னுரை

“காய்ந்து சிவந்தது சூரியகாந்தி.......... ஈந்து சிவந்தது நின் இருகரமே” என்று சீதக்காதியின் வள்ளன்மையைப் புகழ்ந்தார் புலவர் ஒருவர். வள்ளல் அழகப்பரும் அந்த வழியில் வந்தவர்தான்! பாரியின் பரம்பரையில் தோன்றிக் கொடையில் பாரியையும் வென்றவர். யாழ்பிடித்துப் பண்கள் மீட்டிக் கவிதை பாடிவந்த பாவலர்க்குப் பாரி தன்உடைமை, பொருள், உயிர் அத்தனையும் ஈந்தான். முந்நூறு ஊரும் பரிசளித்தான்; என்றாலும்பறம்புமலையைத் தனக்கேகொண்டான். ஆனால், அழகப்பரோ கொடுத்துக் கொடுத்துக் குறைந்த கரங்களைப் பெற்றவர்; குடியிருந்த வீட்டையும் இறுதியில் கொடுத்தவர். “தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராக” இத்தலைமுறையில் வாழ்ந்த ஒரே வள்ளல் அழகப்பர்தான் என்றால் மறுத்துரைப்பார் யாரே? வரவு வருமுன் கல்வி வளர்ச்சிக்காகச் செலவு எழுதி வைத்த செம்மல் அவர்!

“பெற்றதாயும் பிறந்த பொன்னாடும் நற்றவ வானினும் நனிசிறந்தனவே” என்ற எண்ணம் அவர் உள்ளத்தில்எப்பொழுதும்அலைமோதிக்கிடந்தது.பிஞ்சுக் குழந்தை முதல் பெரிய விஞ்ஞானிகள்வரை அத்தனை பேரும் கல்வியும் பயிற்சியும்பெறப் பல்வேறுகழகங்களைக் காரைக்குடியிலே நிறுவினர். நரியும் பாம்பும் நடமாடிய காட்டில் மாணவரும் ஆசிரியரும் பவனி வரச் செய்தார்!

பகையும் இருளும் பரவியிருந்த காட்டில் ஒளியும் அருளும் சுடர்வீசச் செய்தார்! வறுமையும் தனிமையும் சூழ்ந் திருந்த பகுதியில் செல்வமும் கூட்டுறவும் தழைத்தோங் கச் செய்தார்! அவர் தனிமனிதராகப் பத்தாண்டுக் காலத்தில் செய்த அறச்செயல்களை எண்ணினால் இதயம் விம்மும்! நினைத்தால்நெஞ்சம்பூரிக்கும்! அவரதுவரலாறு இந்தியர்களின் சாதனைகளை விளக்க வல்ல ஒரு சரித்திர ஏடு! நாட்டின் தார்மீகப்பண்புகளை வெளிநாட்டாருக்கும் விளங்க வைக்கும் ஒரு மாமறை நூல்! அத்தகைய வள்ளற் பெருந்தகையின் வாழ்க்கையை நாம் அறிந்து கொள்ளாவிட்டால் பிறவிப்பயனை அடையத் தவறியவர் களாவோம்.

# உ. இளமை

செட்டிநாட்டில் காரைக்குடிக்கு அருகில் மூன்று கல் தொலைவில் கோட்டையூர் என்று ஓர் ஊருண்டு. அவ்வூரில் பெயருக்கேற்பக் கோட்டை கொத்தளங்கள் போன்ற வீடுகள் காட்சியளிக்கும். அத்தகைய ஒரு வீட்டில் 6—4—1909இல் அழகப்பர் பிறந்தார். அவரது தந்தையார் பெயர் இராமநாதன் செட்டியார்; தாயார் பெயர் உமையாள். அழகப்பர் முதலில் உள்ளூரில் ஒரு திண்ணைப் பள்ளியில் கல்வி பயின்றார். பிறகு காரைக்குடியிலுள்ள எஸ். எம். எஸ். உயர்நிலைப்பள்ளியில் சேர்ந்தார். அங்கு சில ஆண்டுகள் தொடர்ந்து படித்தார். அக்காலத்தில்தான் அவரது வாழ்க்கையில் ஒரு முக்கியமான நிகழ்ச்சி நடந்தது.........

அப்பொழுது அவருக்கு வயது 16. பத்தாவது வகுப்பில் படித்துக்கொண்டிருந்தார். அவருடைய தந்தையார் மலேயாவில் வாணிபம் செய்துகொண்டிருந்தார். தன் மகனும் வணிக உலகிலேயே வளரவேண்டும் என்று அவர் விரும்பினார். உடனே மகனுக்கு ஒரு கட்டளை அனுப்பினார். "படிப்பை நிறுத்திவிட்டு அடுத்த கப்பலிலேயே மலேயாவுக்குப் புறப்பட்டுவா" என்பதுதான் அந்தக் கட்டளை.

தந்தையின் கட்டளையைத் தலைமேல் தாங்கியவாறு அடுத்த கப்பலிலே மலேயாவுக்குப் புறப்பட்டார் அழகப்பர். ஆனால் அவரது உள்ளமோ அலைகடல் போல் கொந்தளித்துக் கொண்டிருந்தது. படிப்புப் பாதியிலே நின்றுவிட்டதே என்று வருந்தினார். இனி

என் செய்வது என்று ஏங்கினர். ஆங்கிலக் கல்வியின் மீது அவர் கொண்டிருந்த ஆசைச் சங்கிலி அறுந்ததால் அவரது உள்ளம் உடைந்தது: அளவுக்கு மீறிய மன உளைச்சலால் உடம்பு கொதித்தது; காய்ச்சல்ஏற்பட்டது. உடனே கப்பல் மருத்துவர் ஓடிவந்தார்; உடல்நிலையைச் சோதித்தார். "இக் காய்ச்சல் அம்மை நோய்க்கு அறிகுறிபோல் தெரிகிறது" என்ற அணுக்குண்டைத் தூக்கிப்போட்டார். அவ்வளவுதான் .............. கப்பல் தலைவரான ஆங்கிலேயருக்குப் பயம் ஏற்பட்டுவிட்டது. ஏனென்றால் அம்மை என்ற பெயரைக் கேட்டாலே அஞ்சி ஓடுவது அவர்கள் இயல்பு. சென்னையை விட்டுப் புறப்பட்ட கப்பல் அடுத்தநாள் நாகப்பட்டினத்தில் நின்றது. ஒரு நாளைக்குள் அழகப்பருக்கு ஏற்பட்ட காய்ச்சல் ஆங்கில அதிகாரியைக் கலக்கிவிட்டது. உடனே அவர் அழகப்பரை நாகையில் இறக்கிவிட்டுக் குடும்பத்தாருக்குத் தந்தி தொடுத்தார். கப்பலை விட்டு இறங்கியதும் அழகப்பருக்குக் காய்ச்சல் பறந்தோடி விட்டது. இனித் தொடர்ந்து படிக்கலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. அடுத்த நாள் ஊர் திரும்பிப் பள்ளிக்குச் சென்றார் அழகப்பர். அவரைக் கண்ட மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் ஒரே வியப்பு! கப்பலேறிய அழகப்பர் எப்படித் திரும்பி வந்தார் என்பதே பிரச்னை! பிறகு அவர் அனைத்தையும் விளக்கிக் கூறினர்.

அழகப்பர் தனது கல்வி விருப்பத்தை விளக்கித் தந்தையாருக்கு ஒரு கடிதம் எழுதினர். மகனின் நிலையறிந்த தந்தையார் மனமார ஆசிகூறிக் கல்வி கற்க அனுமதி கொடுத்தார். அதன்பின் அழகப்பரின் கல்வி நாவாய் தொடர்ந்தோடத் தொடங்கியது. பள்ளிப் படிப்பைமுடித்ததும் அழகப்பர் சென்னைசென்று மாநிலக்

கல்லூரியில் சேர்ந்து, 1930ஆம் ஆண்டில், அதாவது அவரது 21ம் வயதில் எம். ஏ. பட்டம் பெற்ருர். அழகப்பர் தான் அவரது சமூகத்தில் எம். ஏ. பட்டம் பெற்ற முதல் மனிதர் என்பது குறிப்பிடத்தக்கது.

அழகப்பருக்கு இங்கிலாந்து சென்று ஐ சி. எஸ். பட்டம் பெறவேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. தனது ஆசையைத் தந்தையிடம் வெளியிட்டார். அறிவறிந்த மகனைப் பெற்ற தந்தை இதற்கா மறுத் துரைப்பார்? உடனே "சரி" என்ருர். ஒரு நல்லநாளில் அழகப்பர் இலண்டனுக்குப் புறப்பட்டார். இலண்டனை அடைந்ததும் அவரது உடல்நிலை சீர்கெட்டது. அந் நாட்டின் குளிர் அவர் உடம்புக்கு ஏற்றதாயில்லை. உடல்நிலை சரியில்லாததால் ஐ. சி. எஸ். படிப்பில் அவரைச் சேர்த்துக்கொள்ள அதிகாரிகள் மறுத்து விட்டனர். உடனே அவர் "பாரிஸ்டர்" எனப்படும் வழக்கறிஞர் படிப்பில் சேர்ந்தார். கல்லூரிநேரம்போக ஓய்வு நேரத்தை எங்ஙனம் பயன்படுத்துவது என்று சிந்தித்தார்.

அப்பொழுதுதான் இலண்டனுக்கு "ரைட்ஆனரபிள் சீனிவாச சாஸ்திரியார்" வந்தார். உடனே அழகப்பர் அவரைக் கண்டு பேசி, ஏதாவது வேலை வாங்கித் தரும்படி கேட்டுக்கொண்டார். சீனிவாசரும் அரிதின் முயன்று நம் அழகப்பருக்கு "இலண்டன் சார்ட்டர்டு பாங்கில்" ஒரு வேலை வாங்கிக் கொடுத்தார். ஆங்கிலே யர்கள் வேலைபார்த்த அப்பாங்கில் பதவிஏற்ற முதல் இந்தியர் நம் அழகப்பரே ஆவார்! கல்லூரியில் படிக்கும் நேரம்போக எஞ்சிய நேரத்தில் அவர் பாங்கில் வேலை பார்த்தார். அதன்மூலம் கிடைக்கும் வருவாயைக் கொண்டு வாழ்க்கையை நடத்தினர். இதற்கிடையில் அவர் விமானம் ஓட்டும் தொழிலிலும் பயிற்சிபெறத்

தொடங்கி இரண்டாண்டில் சிறந்த விமானியாகவும் ஆனுர்.

1933ஆம் ஆண்டு அதாவது அழகப்பர் இங்கிலாந்துக்குச் சென்ற மூன்ருண்டுகளுக்குப் பிறகு தாயகம் திரும்பினுர். அவர் இந்தியாவை விட்டுப் புறப்பட்ட பொழுது ஓர் எம். ஏ. பட்டதாரி! ஆனுல் திரும்பி வந்த பொழுதோ அவர் ஒரு வழக்கறிஞர்; விமானி; பயிற்சி பெற்ற பாங்குத் தொழிலாளி—இத்தனை சிறப்புக்களுடன் அழகப்பர் செட்டிநாட்டில் காலடி வைத்தார். தனவணிகர் மரபுப்படி அவருக்கும் வள்ளியம்மை ஆச்சி என்பவருக்கும் திருமணம் நடைபெற்றது. அவர்கட்கு உமையாள் என்ற மகவு பிறந்தது. பிறகு வள்ளியம்மை ஆச்சியின் மறைவால் இலட்சுமி ஆச்சி என்பவரை இரண்டாம் தாரமாக அழகப்பர் மணந்தார்.

# 3. தொழில்

அழகப்பருக்கு வாக்கு வன்மையும், சட்ட அறிவும் பட்டப் படிப்பும் இருந்தும்கூட அவரது உள்ளம் வழக்கறிஞர் தொழிலில் ஈடுபடவில்லே. நாட்டில் மாபெரும் தொழிற்சாலேகளே நிறுவிச் சிறந்த தொழிலதிபராக வரவேண்டும் என்பதே அவரது ஆசைக்கனவு. எனவே குடும்பச் சொத்துக்களே எல்லாம் சீர் செய்து பணமாக்கினர். இன்னும் போதாததற்குக் கடன் வாங்கினர்.1937 ஆம் ஆண்டில்கேரளாவில் திருச்சூருக்கு அருகில் புதுக்காடு என்னும் சிற்றூரில் "அழகப்பா டெக்ஸ்டைல்ஸ்'' எனும் ஒரு நூற்பாலேயை நிறுவினர். முதலில் அவருக்குப் பெருத்த நட்டம் ஏற்பட்டது. கடன்காரர்கள் நெருக்கினர். செய்வதறியாது கலங்கினர் அழகப்பர். கைகொடுக்க ஆளில்லே. நூற்பாலேயைத் தொடர்ந்து நடத்துவதற்குப் பஞ்சில்லே. தொழிலாளர்களுக்குச் சம்பளம் கொடுக்கப் பணமில்லே. ஆலேயை மூடவேண்டியது தான் என்ற அவலநிலே ஏற்பட்டது.

உடனே அவர் காஞடுகாத்தானிலிருந்த தன்மகளிடம் ஓடிவந்தார். அவருக்கு உமையாள் என்ற ஒரு மகள் உண்டு. தாயைஇழந்த உமையாள் தன் பாட்டன் வீட்டில் வசித்து வத்தாள்- அப்பொழுது அவள் ஒரு சிறுமி! தந்தையைக் கண்ட உமையாள் மகிழ்ச்சியோடு வரவேற்ருள். தந்தையாரின் முகத் தோற்றத்திலிருந்து அவரது மன வருத்தத்தை உணர்ந்து கொண்டாள். ‘'எவ்வளவு பணம் தேவை'' என்று கேட்டாள். அழகப்பரோ பதினயிரக் கணக்கில் ஒரு தொகை சொன்னர். உடனே அவள் உள்ளே சென்ருள். பாட்டன் பாட்டிக்

குத் தெரியாமல் இரும்புப் பெட்டியைத் திறந்தாள். தனக்குரியதும், தன் தாய் முன்பு அணிந்து கொண்டது மான தங்க வைரநகைகளை எல்லாம் சிறு மூட்டையாகக் கட்டி எடுத்து வந்து வெற்றிப் புன்னகையோடு தந்தை யிடம் கொடுத்தாள். "உங்களுக்கு இல்லாதது எனக்கு எதற்கு?" என்று அந்தச் சிறுவயதிலும் தியாக உணர் வோடு பதிலுரைத்துத் தந்தைக்கு ஆர்வமூட்டினாள். அந்தச் சிறுமி. உமையாளின் சொல்லும் செயலும் தான் அழகப்பருக்குப் புத்துயிர் கொடுத்தன. தாரை தாரையாகக் கண்ணீர் வடித்தார் அழகப்பர். "இனிப் பொருள் ஈட்டாமல் இந்த ஊரில் கால்வைக்க மாட் டேன்" என்று சூளுரைத்துப் புறப்பட்டார். நகைகளை விற்று ஆலைகளை நடத்தினார். மகளின் தியாக உணர் வுக்கு ஆண்டவன் பரிசளித்தான். நூல் விலை ஏறத் தொடங்கியது.

அப்பொழுதுதான் இரண்டாம் உலகப் போர் ஆரம் பித்தது. பிறகு விலை ஏற்றத்திற்குக் கேட்கவா வேண் டும்? பஞ்சும் நூலும் பர பரவென்று விலை ஏறின. ஏராளமான செல்வம் குவிந்தது; மாபெரும் ஆலை முதலாளியாக மாறினார் அழகப்பர். என்றாலும் அவர் தன் மகள் செய்த நன்றியை மறக்கவில்லை. உடனே மகளைப் பார்க்கப் புறப்பட்டார். அப்பொழுது அவர் முன் போல் காலால் நடந்து செல்லவில்லை; கவர்ச்சிமிக்க 'கெடிலாக்' காரில் சென்றார். வெறும் கையோடு செல்ல வில்லை. விலையுயர்ந்த நகைகளோடுசென்றார். அனைத்தும் பூட்டி மகளை ஆசீர்வதித்தார். பிறகு 1943–ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் உலகமே வியக்கத்தக்க அள வுக்கு அவளது திருமணத்தை முடித்தார். மணமகனின் பெயர் இராமநாதன் என்பதாகும்.

செட்டிநாட்டில் தன்மருமகளைப் பார்த்து ஒவ்வொரு மாமியாரும் கேட்பதுண்டு..... "நீ என்ன தங்கக்கட்டி வெள்ளிக் கட்டியா உருட்டிக் கொண்டு வந்தாய்" என்று. ஆனால் அந்த வாய் வார்த்தையை மெய்யாக்கினார் அழகப்பர். தன் மகளுக்குத் தங்கத்தையும் வெள்ளியையும் கட்டி கட்டியாக சீதனமாகக் கொடுத்தார். வைரம் வைரமாக அவள் உடல் முழுதும் இழைத்துப் போட்டார். அவரது அன்புக்குரிய ஒரே தங்க மகள் அல்லவா? அவளுக்கு எவ்வளவு செய்தாலும் தகும் என்று ஊர் முழுதும் பேசியது.

அழகப்பர் தோற்றுவித்த தொழிற்சாலைகளின் விபரம் வருமாறு. 1937-இல் கேரளாவில் அழகப்பா நகரில் அழகப்பா டெக்ஸ்டைல்ஸ், ஆல்வாயில் அசோக் டெக்ஸ் டைல்ஸ்; கண்ணனூரில் உமையாள் டெக்ஸ் டைல்ஸ், ஈரோட்டுக்கு அருகில் சென்னிமலையில் ஒரு நூற்பாலை முதலியன. மேலும் அவர் பஞ்சு வியாபாரம், பங்கு வாணிகம், விமானக் கம்பெனி ஆகியவற்றிலும் தீவிரமாக ஈடுபட்டார். அவற்றின் மூலம் இலட்சக் கணக்கில் பொருள் ஈட்டி உலகப் புகழ் பெற்றார்.

# 4. தன்மானவீரர்

அழகப்பருக்குப் பங்கு வியாபாரத்தில்(ஷேர்)பெரும் மதிப்புண்டு. அவர் ஒரு ஷேரை வாங்குகிருர் என்ருல் யாரும் விற்கமாட்டார்கள். விற்கிருர் என்ருல் யாரும் வாங்கமாட்டார்கள். ஏனென்ருல் அவர் ஒரு ஷேரை விற்ருல் அதன் விலே இறங்கப்போகிறது என்பதும், வாங்கினுல் அதன் விலே ஏறப்போகிறது என்பதும் உலகப் பிரசித்தம்!

ஒருமுறைஅழகப்பர் ஷேர் வியாபாரம் சம்பந்தமாகப் பம்பாய்க்குச் சென்றிருந்தார். அங்கே பெயர்பெற்ற "ரிட்ஸ்" ஹோட்டலுக்குள் நுழைந்து மானேஜர் முன் போய் நின்ருர். "தங்குவதற்கு அறை இருக்கிறதா?" என்று கேட்டார். உடனே அந்த மானேஜர் "இல்லே; இந்த ஹோட்டலில் எல்லாம் உம்மால் செலவு செய்து தங்க முடியாது" என்ருர். "இந்த ஹோட்டலில் எத்தனே அறைகள் இருக்கின்றன?" என்று திருப்பிக் கேட்டார் அழகப்பர். "என்ன? ஹோட்டலே விலேக்குவாங்குகிறவர் மாதிரிக் கேட்கிறீரே" என்ருர் மானேஜர். அழகப்பர் பதில் சொல்லவில்லே. உடனே அவர் நேராக ஹோட்ட லின் உரிமையாளர் வீட்டுக்குச் சென்ருர். அவரது ஹோட்டலே விலேக்கு வாங்க விரும்புவதாகவும் அதற்கு நல்லவிலே கொடுப்பதாகவும் சொன்னுர். அழகப்பரின் பெருமையை அறிந்திருந்த அந்தப் பம்பாய் முதலாளி உடனே அதைநல்ல விலேக்கு அவருக்கு விற்றுவிட்டார். அத்துடன் ஹோட்டல் மானேஜரிடம் தொலேபேசியின்

மூலம் கீழ்க்கண்டவாறு முதலாளி சொன்னார்..... "நமது ஹோட்டலை அழகப்பருக்கு விற்று விட்டேன். ஆகவே, நீர் உடனே இங்கேவந்து அவரைச் சந்தித்து, அவரது உடன்பாடு பெற்று வேலை பார்க்கவேண்டியது'' என்றார். செய்தியறிந்த மானேஜர் ஓடிவந்து அழகப்பரின் கால்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். உடனே அழகப்பர் புன்னகையோடு கூறினார்...... . "உமது அகம்பாவம் எனக்கு இத்தனை இலட்சம் ரூபாய் செலவு வைத்துவிட்டது. இனிமேல் யாரிடமும் ஆணவமாக நடந்துகொள்ளாதீர்'' என்று அறிவுறுத்தி அனுப்பினார். பிறகு அதே ஹோட்டலைச் சிறிது இலாபத்துடன் சிலநாட்களில் விற்று விட்டார்.

# 5. கல்விப் பணி

அழகப்பருக்கு எப்பொழுதுமே கல்வியில் ஆர்வம் மிகுதி. எனவே 1947 இல் காரைக்குடியில் அழகப்பா கல்லூரியைத் தொடங்கினர். அக்கல்லூரியைத் தொடங்கி வைத்தவர் அந்நாள் தமிழகக் கல்விஅமைச்சர் திரு. அவிநாசிலிங்கம் செட்டியார் அவர்களாவார். ஏறத்தாழ நூறு மாணவர்களுடன் வாடகைவீட்டில் தொடங்கப் பெற்ற அக்கல்லூரி இன்று இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட மாணவர்களைப் பெற்று ஆயிரம் ஏக்கர் நிலப் பரப்பில் தலை நிமிர்ந்து நிற்கின்றது. அங்கே அடுத்தடுத்துப் பல கல்வி நிலையங்கள் தோன்றலாயின. அழகப்பா தொடக்கப்பள்ளி, ஆதாரப்பள்ளி, மாண்டிசோரிப்பள்ளி, மாதிரி உயர்நிலைப்பள்ளி, இசைப்பள்ளி, நடனப்பள்ளி, கலைக் கல்லூரி, பொறியியற் கல்லூரி, மகளிர் கல்லூரி, தொழில் நுணுக்கக் கல்லூரி, ஆசிரியர்பயிற்சிக் கல்லூரி, உடற்பயிற்சிக் கல்லூரி, தமிழ் ஆராய்ச்சி நிலையம், பவநகர் விளையாட்டுத் திடல், மாபெரும் உணவில்லங்கள் முதலிய பலநிலையங்கள் அங்கே பூத்துக்காய்த்துள்ளன. அது ஒருதனிப் பல்கலைக் கழகமாகக் கனியும் நாள் வெகு தொலைவில் இல்லை. கல்லூரி வட்டத்திற்கு "அழகப்பா புரம்" என்று பெயர் சூட்டப் பட்டுள்ளது.

எல்லாவற்றுக்கும் மேலாக அழகப்பர் செய்த ஓர் அதிசயசாதனை அவர்அங்கே நிறுவியுள்ள "மின்—இரசாயன ஆராய்ச்சிக்கூடமே" (Electro-Chemical Research institute) ஆகும். அவ்வாராய்ச்சிக் கூடத்தைக் காரைக்குடியில் நிறுவுவதற்காக அவர் 15 இலட்சம் ரூபாயும் 300 ஏக்கர் நிலமும் தருவதாக இந்தியத் தலைமை அமைச்சர் நேருவிடம் புது டெல்லியில் ஒருநாள் நள்ளிரவு 12

மணிக்கு வாக்குறுதி அளித்தார். விஞ்ஞானிகள் குழு அடுத்தமாதமே காரைக்குடிக்கு வந்தது. நமதுஅழகப்பர் பெரிய இயந்திரங்களை வரவழைத்துக் காரைக்குடியைச் சுற்றியுள்ள காட்டை அழித்து, மண்ணைத் தோண்டி நீர் வரவழைத்துக் காட்டினர். விஞ்ஞானிகளின் உள்ளம் விரிந்தது. உடனே ஆராய்ச்சிக்கூடம் நிறுவ ஒப்புதல் அளித்தனர்.1948ஆம்ஆண்டு அதற்குரியஅடித்தளக்கல் நாட்டியவர் நமதுமுன்னுள் இந்தியத்தலைமை அமைச்சர் நேரு ஆவார். பின், அதைத் தொடங்கி வைத்தவர் நம் முன்னுள் குடியரசுத் தலைவர் திரு. இராதாகிருஷ்ணன் ஆவார்.

அழகப்பர் தமிழ் நாட்டின் தவப்புதல்வராகப் பிறந்தாலும் தன்னை ஆதரித்த கேரளத்தை மறக்கவில்லை. அவரது "அழகப்பாடெக்ஸ்டைல்ஸ்" உள்ளசுற்றுப்புறப் பகுதிக்கு "அழகப்பாநகர்" என்று கேரள மக்கள் பெயர் சூட்டினர். அதற்குக் கைம்மாருக அவர் அங்கே ஓர்உயர் நிலைப்பள்ளி, மருத்துவமனை, பூங்கா, தொழிலாளர் குடியிருப்பு முதலியன நிறுவியதோடு ஒரு தொழில் நுணுக்கப் பள்ளியும் தோற்றுவித்தார். இவை போதாதென்று அவர் பல்வேறு கல்வி நிலையங்களுக்கும் ஏராளமாகப் பணத்தை வாரி வழங்கினர்.

சென்னைப் பல்கலைக் கழகத்தார் கிண்டியில் அழகப்பச்செட்டியார் பொறியியற் கல்லூரியை நிறுவுவதற்கு ரூ 5,00,000 உம், அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் பொறியியற் கல்லூரி தொடங்குவதற்கு ரூ 5,00,000 உம் நிதி உதவி அளித்தார். மேலும் சென்னையிலுள்ள

"சேவாசங்கத்துக்கு" ரூ 75,000 உம், திருவாங்கூர் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பட்டப் படிப்புத் தொடங்க ரூ 1,00,000 உம் கொடுத்தார். சென்னையில் கணித மேதை இராமாநுசத்தின் பெயரால் பெரும் பொருட் செலவில்1948ஆம்ஆண்டில்ஒருகணிதஅறிவுக்கூடத்தைத் தொடங்கினார். டில்லியிலுள்ள தென்னிந்தியக் கல்விக் கழகத்திற்கு ரூ. 25,000உம், மதுரையிலுள்ள லேடி டோக் கல்லூரிக்கு ரூ 25,000 உம் நன்கொடை வழங்கினார்.

சென்னையிலுள்ள "தக்கர்பாபா வித்தியாலயத்தில்" "அழகப்பா மண்டபம்" கட்டுவதற்காக அவர் ரூ 1,17,000 நிதியளித்தார். அம்மண்டபத்திற்குரிய அடித்தளக்கல் 1946 இல் அண்ணல் காந்தியடிகளால் நாட்டப்பட்டது.

இன்னும் அவர்கொடை கொடுத்த தொகைவிபரம் வருமாறு: தமிழ்க்கலைக் களஞ்சிய வெளியீட்டுக்கு ரூ 10,005; கொச்சி புயலுதவி நிதிக்கு ரூ 10,001; திருவாங்கூர் அரசாங்கநில ஆராய்ச்சி நிதிக்குரூ 20,800; எர்ணகுளம் மகாராஜா கல்லூரியின் நாட்டு மருத்துவ ஆராய்ச்சிக்கு ரூ 80,000; கொச்சி மாணவர்களின் வெளி நாட்டுப் படிப்புக்கு ரூ 1,00,000; கொச்சி நாட்டுக் குழந்தைகள் பகலுணவுக்கு ரூ 1,50,000; என்று ஏராளமான தொகைகளைக் கணக்குப் பார்க்காமல் வாரிவழங்கினார். தென்னிந்தியர் வணிகர் கழகத்திற்குச் சென்னையில் மிகப்பெரிய நிலப் பரப்பை நன்கொடையாக வழங்கினார்.

அவருடைய கொடைச் செயல்களுக்கு ஒரு முத்தாய்ப்புபோல் அமைந்தது எதுவெனில் அவர் தமது மகளிர் கல்லூரிக்குத் தம் சொந்த மாளிகையையே மன

முவந்து கொடுத்தசெயலாகும். அந்தப்பெருங் கொடையைப் போற்றிப் பேராசிரியர் டாக்டர் வ. சுப மாணிக்கம் அவர்கள் பாடியதாவது.........

“கோடி கொடுத்த கொடைஞன் குடியிருந்த
வீடும் கொடுத்த விழுச்செல்வன்—தேடியும்
அள்ளிக்கொடுத்த அழகன்; அறிவூட்டும்
வெள்ளி விளக்கே விளக்கு.''

இங்ஙனம் இயல்பாகக் கொடைசெய்த அழகப்பருக்கு அண்ணமலே அரசர் அவர்கள் “வள்ளல்'' என்ற பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தார்கள். இந்த நூற்ருண்டின் மிகப்பெரிய வள்ளலாகத் திகழ்ந்த அழகப்பரைக் ‘‘கல்வி அழகன்'' ‘‘என்றும்'' “கொடை அழகன்'' என்றும் கூறுவது சாலவும் ஏற்புடைத்து.

# 6. சிறப்புக்கள்

அழகப்பர் கல்வியையும் தொழிலையும் இருகண்களெனப் போற்றினர். 1. அழகப்பா பொறியியற் கல்லூரி காரைக்குடி 2. அண்ணுமலைப்பல்கலைக்கழகப் பொறியியற் கல்லூரி; அண்ணுமலை நகர்; 3. அழகப்பச்செட்டியார் பொறியியற் கல்லூரி; கிண்டி (சென்னை) 4. அழகப்பா தொழில் நுணுக்கப்பள்ளி; காரைக்குடி 5. அழகப்பா தொழில் நுணுக்கப்பள்ளி; அழகப்பா நகர் (கேரளா) ஆகிய ஐந்துதொழிற்கல்வி நிலையங்கள் தோன்ற அழகப்பர் வித்தூன்றினர். ஏராளமான தொழிற்சாலைகளுக்கு அதிபராக விளங்கினர். ஆகவே, "தென்னிந்தியர் வணிகர் கழகம்'' அவரைத் தன் தலைவராகத் தேர்ந்தெடுத்துப் பாராட்டியது. அண்ணுமலை, சென்னைப் பல்கலைக் கழகங்கள் அவருக்கு முறையே 1943, 44 ஆம் ஆண்டுகளில் "டாக்டர்'' பட்டம் வழங்கிச் சிறப்பித்தன. 1946இல் அவருக்கு ''சர்'' பட்டம் வழங்கப் பெற்றது. ஆனல் அதைஅவர் பயன்படுத்தவில்லை. பிராந்தியத் தொழிற்கல்விக்குழு, விஞ்ஞான ஆராய்ச்சிஆலோசனைக் குழு, கல்லூரி நிர்வாகத் திட்டக் குழு, கொச்சி தொழில் வளர்ச்சிக் குழு, போர்ப் பிற்கால ஆக்கப் பணிக் குழு, இந்தியமக்கள் பஞ்ச நிவாரணக் குழு, ஆகியவற்றில் உறுப்பினராகவும், மின்சார–இரசாயன ஆராய்ச்சிக்கூட ஆலோசனைக் குழு, சென்னை அரசாங்கத் தொடக்கக் கல்விக் குழு, பாரத சாரணர் படை ஆகியவற்றின் தலைவராகவும் அவர் திறம்படப் பணியாற்றியிருக்கிருர்.

சென்னைப் பல்கலைக்கழக ஆட்சிக்குழுவின் (சிண்டிகேட்) ஆயுள் உறுப்பினராக 1946இல் அவர் தமிழக ஆளுநரால் நியமிக்கப் பெற்ருர். டில்லியில் ''அனைத்திந்தியஉற்பத்தியாளர் சங்க'' மாநாட்டுக்கு அவர் தலைமை தாங்கினுர். அவரது கல்விப்பணி, தொழிற்பணி, சமுதாயப்பணி, ஆகியவற்றைப் போற்றிப் பாரத அரசாங்கம் அவருக்கு 1957 ஆம் ஆண்டில் ''பத்ம பூஷன்'' என்ற பட்டத்தைக் கொடுத்துப் பெருமைப் படுத்தியது. பாரத நாட்டில் வள்ளல் ஒருவருக்கு அப்பட்டம்வழங்கப்பட்டது அதுவே முதல் தடவையாகும்.

# 7. உலகச் சுற்றுப்பயணம்

அழகப்பர் பலமுறை வெளிநாடுகளுக்குப் பயணம் சென்றிருக்கிருர். அவர் போகாத நாடும், பாராத பல்கலைக் கழகமும், கைகுலுக்காத தலைவரும், கொடை கொடுக்காத கல்வி நிலையமும் இவ் வுலகத்தில் இல்லை. அழகப்பர் அவ்வப்போது சில குறிப்பிட்ட நாடுகளுக்குக் கல்வி அறிஞராக இந்திய அரசாங்கத்தின் சார்பில் சென்றிருக்கிருர். கிளாஸ்கோ பல்கலைக் கழகத்தின் பொன்விழா நிகழ்ச்சிகளில் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் பிரதிநிதியாகவும், கேம்பிரிட்ஜில் நடந்த ''காமன்வெல்த் பல்கலைக்கழக மாநாட்டில்'' சென்னைப் பல்கலைக் கழகப் பிரதிநிதியாகவும், ஜப்பானில் நடந்த ''பசிபிக் உறவு மாநாட்டில்'' இந்திய அரசாங்கத்தின் பிரதிநிதியாகவும் கலந்துகொண்டு அரிய சொற்பொழிவுகள் ஆற்றி நாட்டிற்குப் பேரும் புகழும் பெற்றுத் தந்திருக்கிருர்.

# 8. வளர்த்தபிள்ளை

ஒரு நாள் நள்ளிரவு...அழகப்பர் தம் காரில் கேரளா வில் காட்டுவழியில் பிரயாணம் செய்துகொண்டிருந்தார். திருடர்களும் உறங்கும் நேரம். ஆந்தைகளின் அலறல் களுக்கிடையில் கார் போய்க்கொண்டிருந்தது. திடீரென்று காரின் விளக்குகள் அணைந்தன; கார் நின்றது.

அழகப்பர் காரோட்டியைப் பார்த்தார். அவனோ ஒன்றும் புரியாமல் திகைத்தான். பிறகு விளக்கைப் பொருத்திப் பார்த்தான்; எரியவில்லை. சிறிது சோதனைக்குப்பிறகு, விளக்குக் கெட்டுப்போய்விட்டது என்பது தெரிந்தது. இனி என்ன செய்யமுடியும்? நடுக் காட்டில் நள்ளிரவில் தன்னந்தனியாகக் காரோட்டி யோடு நிற்கும் அழகப்பரின் நெஞ்சம் அலைமோதியது. ஆண்டவனை நினைத்துக்கொண்டிருந்தார். அவ்வளவு தான்; ஐந்துநிமிடம் கழியுமுன் இன்னொரு கார் அந்தச் சாலையில் வந்தது! அழகப்பரின் காரருகில் வந்ததும் அது நின்றது. உடனே அதிலிருந்து இறங்கினான் ஒரு மலையாள இளைஞன். அவன் அழகப்பரைக் கண்டதும் ஓடோடிச்சென்று வணங்கினான். “ஐயா! நலமா? எங்கே...காரைக்குடியிலிருந்து வருகிறீர்களா? கல்லூரி நன்றாய் நடைபெறுகிறதா?” என்று தமிழில் பல வினாக் களை எழுப்பினான்.

அழகப்பருக்கோ மலையாள இளைஞன் அழகாகத் தமிழ் பேசுவதும், தன்னை அறிந்துகொண்டு நலம் விசாரிப்பதும் எல்லாம் பெரும் வியப்பை அளித்தன.

உடனே அவர் அவனிடம் "தங்களை யாரென்று தெரியவில்லையே?" என்றார். அதற்கு அவன் "நான் காரைக்குடியில் உங்கள் கல்லூரியில் ஏழாண்டுகளுக்கு முன் பி. ஏ. படித்தேன். என் பெயர் கிருஷ்ணன்குட்டி. இப்பொழுது திருவனந்தபுரத்தில் சப்கலெக்டராக இருக்கிறேன்" என்றான். அதற்குப்பிறகு அழகப்பருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. பிறகு அந்த மாணவனது காரிலேயே அழகப்பர் தொடர்ந்து தம் பயணத்தைத் தொடங்கினார்.

## 9. உற்றுழி உதவுதல்

காரைக்குடியைச் சேர்ந்த இளைஞன் ஒருவன் வறுமையால் வாடினான். தனது ஏழைப் பெற்றோரைக் காப்பாற்றுவதற்கு வழி தெரியாமல் திண்டாடினான்.

பள்ளி இறுதி வகுப்புக்குமேல் படிக்க முடியவில்லை. எனவே படிப்பை நிறுத்திவிட்டு வேலை தேடி அலைந்தான். எங்குமே வேலை கிடைக்கவில்லை. இறுதியில், அழகப்பரைக் காண ஒரு நாள் அவர் வீட்டிற்கு வந்தான். அவன் அவரது வீட்டு வாசலின் முன் போய் அமர்ந்துகொண்டான். அப்பொழுது காலை மணி 9. வெளியில் போயிருந்த அழகப்பர் வீட்டுக்கு வந்தார். இளைஞன் எழுந்து அவருக்கு வணக்கம் செலுத்தினான்! அவரும் பதில் வணக்கம் செலுத்திவிட்டு உள்ளே போய்விட்டார்.

பிறகு மாலை 4 மணிக்கு வெளியே வந்தார் அழகபர். அப்பொழுதும் இளைஞன் எழுந்து நின்று வணக்கம் செலுத்தினான். அவர் பதில் வணக்கம் செலுத்திவிட்டுக் காரில்போய் அமர்ந்தார். கார் புறப்

பட்டது. அப்பொழுது அவர் தற்செயலாக இளைஞனைக் கவனித்தார். உடனே காரை நிறுத்தி, இளைஞனை அருகில் அழைத்தார். "ஏன் இங்கே காலை முதல் காத்திருக்கிருய்?" என்று கேட்டார்.

உடனே அவன் தன் வறுமை நிலைபற்றிச் சொல்லி ஏதாவது வேலை வேண்டும் என்று கேட்டான். அக்கணமே அவர் கோவையைச்சேர்ந்த ஓர் ஆலை முதலாளிக்கு ஒரு சிபாரிசுக் கடிதம் எழுதி அவனிடம் கொடுத்தார். அத்துடன் கோவை செல்லும் செலவுக்கு ரூபாய் இருபதும் அவன் கையில் கொடுத்து அனுப்பினுர். அவன் மறுநாளே கோவைசென்று வேலை பெற்ருன். இங்ஙனம் அவர் பல குடும்பங்களைக் காப் பாற்றியிருக்கிருர்.

# 10. ஆண்குழந்தை

அழகப்பருக்கு ஆண்குழந்தை இல்லை. அதை அவர் குறையாகக் கருதியதும் இல்லை. எனினும் அவரது உறவினர்கள் சிலசமயம் "உங்களுக்கு ஆண்வாரிசு வேண்டாமா? யாராவது ஒரு பையனைத் தத்து எடுத்துக் கொள்ளுங்களேன்" என்று வலியுறுத்துவர். அப்பொழுதெல்லாம் அழகப்பர்சொல்வார்..."இதோ...கல்லூரியில் கல்வி கற்றுச் செல்லும் ஆயிரக்கணக்கான இளைஞர்கள் என் வாரிசுகள்தானே. இவர்கள் இத்தனைபேர் இருக்கும்பொழுது நான் ஏன் குறிப்பிட்ட ஒரு பையனைத் தத்து எடுத்து வளர்க்க வேண்டும். அது தேவையில்லை. என் சொத்து எல்லோருக்கும் பயன்படட்டும்" என்பார். எனவே அவர் கடைசி வரை ஆண் வாரிசு இல்லாமலே மறைந்தார். எனினும் இன்று நாடெங்கும் அவரிடம் கல்வி கற்ற ஆண் வாரிசுகள் தலைநிமிர்ந்து உலவுகின்றன! அழகப்பரின் மறைவுக்குப் பிறகு அவர் மனைவி இலட்சுமி ஆச்சியால் இராமநாதன் என்னும் இளைஞர் தத்து எடுக்கப் பெற்றுள்ளார்.

## 11. குழந்தை அன்பு

அழகப்பருக்குக் குழந்தைகளிடம் அளவிறந்த அன்பு உண்டு. அவர் காரைக்குடியில் மாண்டிசோரிப் பள்ளி, தொடக்கப்பள்ளி முதலியன ஏற்படுத்தினர். நாள்தோறும் அப்பள்ளிகட்குச் சென்று குழந்தைகளுடன் விளையாடுவார். குழந்தைகளைத் தோளில் தூக்கி வைத்து ஆடுவார். குழந்தையோடு குழந்தையாகப்பழகி மகிழ்வார். அவரைக் கண்டதும் குழந்தைகள் ஓடிவந்து கை நீட்டும். உடனே அவர் விலையுயர்ந்த ரொட்டி, மிட்டாய் முதலிய தின்பண்டங்கள் வழங்குவார்.

அவர் வெளிநாடுகளுக்குச் சென்று திரும்பும் பொழுது, அந்நாடுகளில் உள்ள விளையாட்டுப் பொருள்கள், தின்பண்டங்கள் முதலியவற்றை ஏராளமாக வாங்கி வந்து குழந்தைகட்குக் கொடுப்பார். குழந்தைகளின் மகிழ்ச்சி கண்டு குதூகலிப்பார்! என்னே அவரது குழந்தை அன்பு!

## 12. தமிழ்ப் பற்று

அழகப்பருக்குத் தமிழ் மொழியில் அளவிறந்த பற்றுண்டு. பேராசிரியர் முத்துசிவன் மறைந்தபொழுது அவர் அழுது புலம்பினர். அவர் நினைவாக அரிய மலர் ஒன்றை வெளியிட ஆவன செய்தார். காரைக்குடியில் உலகத் தமிழறிஞர் மாநாடு நடத்த அழகப்பர் ஏற்பாடுகள் செய்தார். ஆனால் பேராசிரியர் முத்துசிவன் மறைவால் அம்முயற்சி தடைப்பட்டது.

காரைக்குடியில் தமிழ் ஆராய்ச்சித்துறை ஒன்றை ஏற்படுத்தி அதற்குத் தமிழ்க்கடல் உயர்திரு. "ராய சொ" அவர்களை இயக்குநராக நியமிக்க அழகப்பர் விரும் பினர். ஆனால் அதற்குள் அவர் நோய்வாய்ப்பட்டதால் அந்த எண்ணத்தை ஈடேற்ற முடியவில்லை. எனினும் அதை நன்கறிந்த அவரது நண்பர் திரு. சி. வி. சி. டி. வெங்கடாசலம் செட்டியார் அவர்கள் அழகப்பருக்குப் பின் கல்லூரி நிர்வாகப் பொறுப்பை ஏற்றதும் அழகப் பரின் கனவை நனவாக்கினர். தமிழ் ஆராய்ச்சித் துறையை ஏற்படுத்தித் தமிழ்க்கடல் திரு "ராய சொ" அவர்களை அதன் இயக்குநராக நியமித்தார். அத்துறை யின் சார்பில் தமிழ்க்கடல் அவர்களின் "கம்பனும் சிவனும்" "வில்லியும் சிவனும்" முதலிய நூல்கள் பல வெளியிடப்பெற்றுள்ளன.

அழகப்பர் கேரளாப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறை ஏற்படுத்த 1937இல் ஒரு இலட்சம் ரூபாய் நன் கொடை வழங்கியதே அவரது தமிழ்ப் பற்றுக்கு நல்ல சான்ருகும். மேலும் தமிழ்க்கலைக் களஞ்சிய வெளி யீட்டுக்கு அவர் ஏராளமான நன்கொடை வழங்கினர். காரைக்குடிக் கம்பன் கழகத்தின் தலைவராய் இருந்து இலக்கியப் பணிபுரிந்தார். அரசியலறிஞர் உயர்திரு. சா. கணேசன் அவர்களின் மொழிப் பணிக்கு உறு துணையாக இருந்தார். மேலும் தேவாரம், திருவாசகம் முதலியவற்றில் மிகுந்த ஈடுபாடு கொண்டு ஒதுவார் களுக்கு ஆதரவு நல்கினர். இத்தகு பணிகளிலிருந்து அழகப்பரின் தமிழ்ப்பற்றை உணரலாம்.

# 13. கொடையின் எல்லை

அழகப்பர் வரவு வருமுன் செலவு செய்த வள்ளலா வார். கையில் இல்லை என்பதற்காக அவர் கொடை கொடுக்கத் தயங்கமாட்டார். சொத்தை விற்றேனும் கொடைவழங்க அவர் இதயம் எண்ணும். அவர் காரைக் குடியில் பொறியியற் கல்லூரி ஏற்படுத்த முன்வந்தார். அப்பொழுது அவர் எதிர்பார்த்த சில தொகைகள் வர வில்லை. எனவே தனது நூற்பாலை ஒன்றை ரூபாய் பதினைந்துஇலட்சத்திற்கு விற்று அத்தொகைமுழுவதை யும் பொறியியற் கல்லூரிக்காக வழங்கினர். உலகமே அவர் கொடையைக் கண்டு வியந்தது!

கோட்டையூரில் பெண்கள் கல்லூரி ஏற்படுத்த அழகப்பர் விரும்பினர். அப்பொழுது அவரிடம் பொருள் வளம் மிகுதியில்லை. எனினும்எண்ணியதைநிறைவேற்ற விரும்பினர். பெண்கள் கல்லூரி தொடங்க அனுமதி கிடைத்தபின் தயங்குவது அழகன்று என்று முடிவுகட்டி னர். கல்லூரிக்குக் கட்டடம் கட்ட அவரிடம்வசதியில்லை. எனவேதனதுசொந்த மாளிகையையே அவர்கல்லூரிக்கு வழங்கினர். தமது மனைவியை வேறொரு சிறிய வீட்டுக்கு அனுப்பினர். தான் அன்றுமுதல் காரைக்குடிக் கல்லூரி வட்டத்தில்உள்ள “பவநகர் ஸ்டேடியத்தில்” தங்கலா னர். அழகப்பரின் கொடை எல்லைகண்டு உலகமே பெரு மிதம் கொண்டது.

அழகப்பர் தமது சொத்துக்களை எல்லாம் திரட்டி ஓர் "அறநிதியமாக" ஏற்படுத்தினர்.அதன்மூலம்கிடைக் கும் வருவாய் முழுதும் கல்விக்கே செலவழிக்கப்பட வேண்டும் என்று முறி எழுதி வைத்தார். சென்னையில் வேப்பேரியில் உள்ள தமது சொந்த வீட்டையும் அற நிலையத்தில் சேர்த்தார் இங்ஙனம் வீடு, வாசல், சொத்து மாளிகை, ஆலை, பங்கு ஆகிய அனைத்தையும் கொடை கொடுத்த இருபதாம் நூற்றுண்டுப் பாரிவள்ளல் அழகப் பரே என்றுல் மிகையாகாது!

## 14. பறம்புமலையில் வள்ளல்

பாரிக்கு உரிய பறம்புமலை பிரான்மலை என்னும் பெயரால் இப்பொழுது வழங்கப்படுகிறது. அப்பறம்பு மலை தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் தேவஸ்தான ஆட்சிக்கு உட்பட்டதாகும். தவத்திரு அடிகளார் அவர் கள் அழகப்ப வள்ளலைப் பாராட்ட விரும்பினர். எனவே பறம்புமலையில் பாரிவிழாவுக்கு ஏற்பாடு செய்தார். புதி தாகஅவ்விழா இலக்கிய முறைப்படி அமைக்கப்பெற்றது.

பொற்றேர் தயார் செய்யப்பட்டு அதில் அழகப்பர் பாரிபோல் அமர்த்தப்பெற்றுர். குடிபடைகள் அனைவருக் கும் நெல்லும் பொருளும் பரிசாக அழகப்பரால் வழங்கப் பெற்றன. பிறகு அவர் தேரில் செல்வதற்குப்பதில் தன்னடக்கத்துடன் நடந்து வேட்டைக்குப் புறப்பட்டுச் சிறிது தூரம் சென்றுர். பாரியின்தேரில் தான் அமர்வது தகுதியன்று என்று அவர் கூறியதை அனைவரும்

பாராட்டினர். பிறகு வேட்டைப் பொருள்களாக முயல் முதலியன குடிமக்களால் கொண்டுவரப்பட்டன. வரும் வழியில் முல்லைக்கொடி கீழே கிடந்தது. அதையெடுத்து அழகப்பர் தேரில் படரவிட்டார். பிறகு தேரை விடுத்து நடந்து வந்தார்.

கோயில் முன்பு பெரிய அரசவை மேடை போடப் பட்டிருந்தது. அதில் பாரியாக அழகப்பர் வீற்றிருந்தார். புலவர்களும் இசையறிஞர்களும் தம் திறனைக் காட்டிப் பாணர்களாகநின்று பாடிப்பரிசு பெற்றனர். அனைவருக் கும் அழகப்பர் ஏராளமான பொருள்களைப் பாரியாக இருந்து வழங்கினர். பிறகு அழகப்பருக்குக் குன்றக்குடி அடிகளார் அவர்களால் பொன்னுடை போர்த்தப் பெற்றுச் சிறப்பிக்கப் பெற்றது.

இங்ஙனம் இருபதாம் நூற்றாண்டில் பாரியின்பறம்பு மலையில் பாரிவிழா அழகப்பரை முதலாக வைத்துப் புதுப் பிக்கப் பெற்றது. வள்ளற் பாதையில் வழிகாட்டி முன் சென்ற அழகப்பருக்கு எவ்வளவு சிறப்புச் செய்தாலும் தகும் அன்றோ!

# 15. அழகப்பா கல்லூரி வரலாறு

1947 ஜூலையில் அழகப்பர் சென்னை அடையாற்றில் நடந்த அன்னிபெசண்ட் அம்மையார் நூற்றாண்டுவிழா மாநாட்டில் கலந்து கொண்டார். அக்கூட்டத்திற்குச் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு. இலட்சுமணசாமிமுதலியார் தலைமைவகித்தார். அவர் நம் அழகப்பரின் மிகச்சிறந்தநண்பர் ஆவார். திரு. இலட்சுமணசாமி முதலியார் மாநாட்டில் பேசும்பொழுது தமிழகத்தின் கல்வித்தேக்கம் பற்றிக்குறிப்பிட்டார். செல்வர்கள் உயர் கல்வி வளர்ச்சிக்குப் பாடுபட முன்வரவேண்டும்என்றும், கல்லூரிகளை ஏற்படுத்த ஒத்துழைக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார். அவரது வேண்டுகோள் அழகப்பரின் உள்ளத்தில் ஆழப் பதிந்தது.

உடனே அழகப்பர் மாநாட்டு மேடைக்குச்சென்று, காரைக்குடியில் தான் ஒரு கல்லூரி ஏற்படுத்த முன் வருவதாக அறிவித்தார். மாநாட்டுப்பிரதிநிதிகள் அனைவரும் மகிழ்ச்சிஆரவாரத்துடன் அழகப்பரின்அறிவிப்பை வரவேற்றனர். பல்கலைக் கழகத் துணைவேந்தர் என்ற முறையில் திரு. இலட்சுமணசாமி முதலியார் காரைக்குடி அழகப்பா கல்லூரிக்கு மேடையிலேயே அனுமதி வழங்கினார். பிறகு கேட்கவேண்டுமா? மறுநாளே அழகப்பர் காரைக்குடிக்கு வந்தார். காரைக்குடி நகர்மன்றத்திற்குச் சொந்தமான "காந்திமாளிகையை" வாடகைக்குப் பெற்றார். பேராசிரியர்கள் பலரை அதிகச் சம்பளம் கொடுத்து அழைத்துவந்தார். இந்தியசுதந்திர நாளன்று (15-8-1947) அழகப்பா கல்லூரி சிறப்பாகத் தொடங்கப் பெற்றது. இதுதான் கல்லூரி தோன்றிய வரலாறுகும்!

# 16. நன்றி மறவாமை

அழகப்பர் ஒரு முறை பொருளாதார நலம் குறைந்து பல துன்பங்களுக்கு ஆளானர். அவர் பெற்ற கடன்களால் பெரிதும் வருந்தினர். அவர்மீது வழக்குகள் ஏற்பட்டன. அவரது சொத்துக்கள் எல்லாம் அவர் கையைவிட்டுப் போகக்கூடிய அவலநிலே ஏற்பட்டது. அச்சமயத்தில் அவர் தன் நண்பரான மான்கொம்பு ஆண்டி ஐயர் என்பவரிடம் சென்ருர். அவரது துணையை வேண்டினர். யாரும் உதவி செய்யத் தயங்கும் அந்த நிலேயில் மான்கொம்பு ஆண்டி ஐயர் அழகப்பரை அன்புடன் வரவேற்று ஆதரவு காட்டினர். சொல்லுதவியும் பொருளுதவியும் செய்தார். அதன் விளேவாக அழகப்பர் பொருளாதார வீழ்ச்சியிலிருந்து தப்பிப் பிழைத்து முன்னேறினர். அந்த நன்றியை மறக்காமல் அழகப்பர் காரைக்குடியில் கல்லூரி வட்டத்தில் "மான்கொம்பு ஆண்டி ஐயர் உணவு விடுதி" ஏற்படுத்தி நன்றிக்கடன் செலுத்தினர். அவ்விடுதித் திறப்புவிழாவில் அழகப்பர் இப்பழைய நிகழ்ச்சியை அனேவர்க்கும் தெரிவித்து நினேவு அஞ்சலி செலுத்தினர். என்னே அழகப்பரின் பெருந்தன்மை! மான்கொம்பு ஆண்டி ஐயரைப் போலவே, கோவையைச் சேர்ந்த "குப்புசாமி நாயுடு" என்பவரும் அழகப்பருக்குத் தக்க சமயத்தில் உதவி செய்தார். எனவே குப்புசாமி நாயுடு பேரிலும் அழகப்பர் ஓர் உணவு விடுதியை ஏற்படுத்தி நன்றிக்கடன் செலுத்தினர்.

# 17. திருமண விருந்து

அழகப்பரின் ஒரே மகள் பெயர் உமையாள் என்பதாகும். அப்பெண்ணின் திருமணம் மிகச் சிறப்பாகக் கோட்டையூரில் 1943இல் நடத்தப்பெற்றது. ஊரெங்கும் கொட்டகை போடப்பட்டுத் தோரணம் கட்டப்பட்டிருந்தது. பல வீடுகளில் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பேருந்துகள் வெளியூர்களிலிருந்து இலவசமாக விடப்பட்டன. இலட்சக்கணக்கான மக்கள் திருமணத்திற்கு வந்து பங்குகொண்டு, பழரச விருந்து உண்டு மகிழ்ந்தனர். ஊர்வாரியாகச் சாப்பாட்டுக் கூடங்கள் அமைக்கப்பட்டிருந்தன. ஒரு சில இடத்தில் ஏராளமான மக்கள் சாப்பாட்டுக்காக வாசலில் காத்திருந்தனர். அப்பொழுது தற்செயலாக அங்குவந்த அழகப்பர் பசிக்கூட்டத்தைக் கண்டு வருந்தினர். உடனே எல்லாச் சாப்பாட்டுக் கூடங்களையும் திறந்துவிடச் சொன்னர். உயர்வு தாழ்வு கருதாமல் யார் எங்கு வேண்டுமானுலும் சாப்பிட அனுமதித்தார். அவரது செயலைப் பொதுமக்கள் பெரிதும் பாராட்டி மகிழ்ந்தனர். சோழன் திருமணத்தில் சாப்பிடாதார் உண்டு. ''சுருக்குண்டேன்; சோறுண்டிலேன்'' என்று அவ்வை பாடினுள். ஆனுல் அழகப்பர் வீட்டில் சாப்பிடாதாரே இல்லை எனலாம்.

திருமணத்தைக் காணவும், விருந்துண்ணவும் இலட்சக்கணக்கில் கூட்டம் வந்திருந்ததால் கட்டுப்பாடு குலைந்து போயிருந்தது. போலீசார் கூட்டத்தைக் கட்டுப்படுத்தத் திணறினர். மணமக்கள் ஊர்வலம்

செல்லவேண்டிய கட்டம் வந்தது. மக்கள் கூட்டம் வழி விடுவதாயில்லை. எனவே சில யானைகளைக் கொண்டுவந்து, முன்னால் அனுப்பிக் கூட்டத்தை விலக்கி ஊர்வலம் நடத்தினார்கள். அழகப்பர் நடத்திய அந்தத் திருமணம் இன்றும் செவிவழிச் செய்தியாகச் சிறப்புடன் பேசப்படுகிறது.

## 18. இனிப்புப்பிரியர்

அழகப்பருக்கு இனிப்புப் பொருள்களில் வேட்கை மிகுதி. அவர் மிகுதியாக உணவுண்ண மாட்டார். ஆனால் அல்வா, குலோப்சான், மைசூர்ப்பாகு போன்ற இனிப்புப் பொருள்களைக் காலை, மாலை, இரவு முதலிய எல்லா நேரத்திலும் விரும்பி உண்பார். தம்மைச் சேர்ந்தவர்களுக்கும் அன்புடன் வழங்கி மகிழ்வார்.

இளநீர், நுங்கு முதலிய பொருள்கள் அவருக்கு மிகவும் விருப்பமானவை. அவர் "கெடிலாக்" காரில் பயணம் செய்து கொண்டிருப்பார். வழியில் எங்காவது நுங்கு, இளநீர் வியாபாரம் நடந்துகொண்டிருந்தால் உடனே காரை நிறுத்துவார். வியாபாரியின் அருகில் சென்று நிறைய நுங்கு முதலியன வாங்கி அருந்துவார். உடனிருப்பவர்கட்கும் வழங்குவார். சுற்றிலும் நிற்கும் குழந்தைகள் பெரியோர்கள் அனைவர்க்கும் கொடுக்கச் சொல்வார். எல்லாம் விற்று முடிந்ததும் உரியவிலையை வியாபாரியிடம் கொடுத்துக் காரில் புறப்படுவார். அந்த ஊரே அழகப்பரை வாழ்த்தும்!

# 19. கடமை

அழகப்பர் எப்பொழுதும் தன் கடமையில் கண்ணும் கருத்துமாக இருப்பார். ஏதாவது ஓர் ஊருக்குக் காலை 4 மணிக்குக் காரில் புறப்படவேண்டும் என்றால் முதல் நாளிலேயே திட்டமிட்டு அனைவருக்கும் கூறிவிடுவார். காரோட்டி, செயலாளர், ஏவலாள் ஆகியோர் முதல் நாளிலேயே தமக்குவேண்டிய பொருள்களைச் சேகரித்து வைத்துக்கொள்வர். கார் காலை 4 மணிக்குப் புறப்படுவதாகத் திட்டமிடப்பட்டிருந்தால் அழகப்பர் காலை 2 மணிக்கே எழுந்து காலைக்கடன்களை முடித்துப் பூசை செய்து புறப்படுவார். சரியாக 4 மணிக்குக்கார்புறப்படும். அவர் திட்டப்படி எல்லாம் சரியாக நடைபெறும். மணிப்படி அவர் செயலாற்றும் கடமை வீரர் என்பது உலகமறிந்த உண்மையாகும். அழகப்பர் எதைத்தவற விட்டாலும் காலத்தைத் தவறவிட மாட்டார்.

குறிப்பிட்ட இடத்திற்குச் சென்றதும் அழகப்பர்தன் பணியாட்களுக்கு ஓய்வு கொடுக்கத் தவறமாட்டார். தனது வேலைகளைத் தக்கவாறு அவர் திட்டமிட்டு வைத்திருப்பார்.அதற்கேற்றகட்டளைகளைப் பணியாட்களுக்குத் தெரிவிப்பார். "இன்று முழுதும் உங்களுக்கு விடுமுறை. நாளைக்காலை 10 மணிக்கு நாம் அயலூர் செல்ல வேண்டும். நீங்கள் எல்லாம் நாளைக்காலை 9 மணிக்கு வந்தால் போதும். இன்று நீங்கள் உங்கள் விருப்பப்படி திரைப்படம், பூங்கா, கடற்கரை முதலிய இடங்களுக்குச் சென்று ஓய்வு எடுத்துக் கொள்ளலாம்." என்றுகூறி, அவரவர்க்குத் தக்கவாறு செலவுப்பணம் கொடுத்து அனுப்புவார். பிறகு தன்வேலையில் ஈடுபடுவார். இங்ஙனம் ஏவலர்க்கு வெளியூரில் பணமும் ஓய்வும்கொடுத்தனுப்பும் பெருந்தன்மை அழகப்பர் ஒருவருக்கேஉண்டு!

# 20. நகைச்சுவை

அழகப்பர் என்றும் நகைச்சுவையாகப் பேசுவதில் வல்லவர். பொதுக்கூட்டமானாலும், நண்பர்கள் கூட்ட மானாலும் அவர் நகைச் சுவைத் துணுக்குகளைக் கூறிக் கொண்டே இருப்பார். அதைக் கேட்பவர்கள் வயிறு குலுங்கச் சிரித்துக்கொண்டே இருப்பர். ஒரு நாள் கல்லூரியில் நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் அவர் கூறிய நகைச் சுவைக் கதை வருமாறு.

ஒரு சமயம் பலசாலி ஒருவன் ஒரு சிற்றூரில் பலப் பரிட்சை வேடிக்கை காட்டிக்கொண்டிருந்தான். நடுத் தெருவில் அவன் வேடிக்கை காட்டியதால் சுற்றிலும் கூட்டம் நிறைந்திருந்தது. பெரிய எடைக் கற்களை அவன் எளிதாகத் தூக்கினான். ஓடும் காரைக் கயிற்றால் கட்டிப் பல்லால் நிறுத்தினான். சாலை போடும் உருளையை ஒரு கயிற்றால் கட்டித் தன் சுண்டு விரலால் இழுத்தான். இப்படி எத்தனையோ அதிசயங்களைச் செய்த அவன் கடைசியில் ஒரு சிறிய எலுமிச்சம்பழத்தை நறுக்காமல் கைவிரலில் வைத்துப் பிழிந்தான். சாறு முழுதும் வெளிவந்து சக்கை மட்டும் எஞ்சி''து. அந்தச் சக்கையை அவன் கையில் வைத்துக்கொண்டு கூட்டத் தைப் பார்த்துச் சவால் விடுத்தான்...

"இந்தச் சக்கையை மேலும் பிழிந்து யாராவது சாறு வரவழைத்தால் நூறு ரூபாய் பரிசு தருகிறேன்" என்றான். கூட்டத்திலிருந்த சில இளம் பயில்வான்கள் எழுந்து வந்து சக்கையைப் பிழிந்தனர்; சாறு வர வில்லை. தோற்றுப்போயினர். அப்பொழுது மூலை யிலிருந்து ஒரு நடுத்தரமான ஆள் வந்தார். சக்கையைக்

கையில் எடுத்துச் சாதாரணமாகப் பிழிந்தார். என்ன வியப்பு! ஐந்தாறு சொட்டுச் சாறு வடிந்தது! அதைப் பார்த்ததும் கூட்டமே ஆரவாரம் செய்தது. பயில்வான் தோற்றுப்போனதற்கு அறிகுறியாக அடக்கமுடன் நூறு ரூபாயை எடுத்து அந்த ஆளிடம் கொடுத்தான். பிறகு "நீங்கள் யார்!" என்று பணிவோடு கேட்டான்.

அதற்கு அந்த ஆள் "நான் ஒரு வருமானவரி அதிகாரி. சக்கையிலிருந்து சாறு பிழிவதுதான் என் வேலை" என்று கூறினராம்—அழகப்பரின் இந்தக் கதையைக் கேட்டதும் கூட்டமே வயிறு குலுங்கச் சிரித்தது!

அழகப்பர் சென்னையில் உள்ள மாநிலக் கல்லூரியில் இளம் வயதில் சேர்ந்தார். அவர் சற்றுத் தாமதமாகச் சேர்ந்ததால் எல்லா மாணவர்களின் பெயர்களும் வருகைக் குறிப்பேட்டில் (Attendance Register) பதியப் பெற்று வரிசை எண்களும் கொடுக்கப்பெற்று விட்டன. வரிசை எண்கள் கொடுக்கப்பட்டபின் பெரும்பாலும் புதிய மாணவர்களை அக்காலத்தில் சேர்ப்பதில்லை. எனினும் அழகப்பரின் திறமை கருதி அவரைக் கல்லூரி யில் முதல்வர் சேர்த்துக் கொண்டார். வருகைக் குறிப் பில் அவர் பெயர் பதியப்பட்டது. ஆனல் வரிசை எண் கொடுக்கப்பட வேண்டுமே! என்ன எண் கொடுப்பது.?

ஆங்கில அகர வரிசைப்படி அழகப்பர் பெயர் முதலில் எழுதப்பட வேண்டியதாகும். ஆனல் அவர் வகுப்பில் "அண்ணாமலை" என்பவரின் பெயர் முதலில் எழுதப்பெற்று முதல் எண் வழங்கப் பட்டிருந்தது. அவரைத் தொடர்ந்து மற்றவர்களுக்கும் எண்கள் கொடுக்கப்பட்டிருந்தன. இப்பொழுது அழகப்பருக்கு முதல் எண் கொடுத்தால் எல்லோருடைய எண்ணையும்

மாற்றவேண்டி நேரும். இதனுல் பல பிரச்னைகள் ஏற்படும். இதை எப்படிச் சமாளிப்பது என்று முதல்வர் சிந்திந்தார்.

அப்பொழுது அழகப்பர் ஓர் அரிய யோசனை கூறினுர். “முதல்வர் அவர்களே! யாருடைய எண்ணையும் மாற்ற வேண்டாம். என் பெயரை முதலில் எழுதி O என்ற எண்ணைக் கொடுங்கள். என்னை O என்றே வகுப்பில் அழைக்கட்டும். நான் வருகை தெரிவிக்க “உள்ளேன் ஐயா” என்று கூறுகிறேன்” என்ருர். அதைக் கேட்டு முதல்வர் பெரிதும் மகிழ்ந்து, அங்ஙனமே செய்து, அழகப்பரைப் பாராட்டினுர். கல்லூரியில் சீரோ அழகப்பராக இருந்தவர் பிறகு வாழ்க்கையில் ஹீரோ அழகப்பராக மாறினுர் என்று ஒருமுறை இந்நிகழ்ச்சியையும் அவரே ஒரு கூட்டத்தில் நகைச்சுவையாகக் கூறினுர்.

அழகப்பர் மாநிலக் கல்லூரியில் கல்வி பயின்றபொழுது திரு. டாக்டர் இராதாகிருஷ்ணன் ஆசிரியராகப் பணியாற்றினுர். இராதாகிருஷ்ணனுேடு கலந்து பழகிய நாட்களைப் பற்றி அழகப்பர் பெருமையாகப் பேசுவதுண்டு!

## 21. தெய்வபக்தி

அழகப்பருக்கு நிறைந்த தெய்வ பக்தி உண்டு. காலையில் நீராடி இறைவனை வணங்காமல் அவர் எந்தச் செயலிலும் ஈடுபடமாட்டார். அவர் வெளியூர்ப் பயணம் செல்லும்பொழுது கூடப் பூசைப் பெட்டியையும் கையில் எடுத்துச் செல்வார். அப்பெட்டிக்குள் சிவன், திருமால், அனுமார் முதலிய தெய்வங்களின் படங்கள், சூடத்தட்டு, மணி, திருநீறு, குங்குமம், சந்தனம் முதலியன இருக்கும், கார், புகைவண்டி, விமானம் முதலியவற்றில் பயணம் செய்யும் பொழுது கூட அவர் பூசை செய்யத் தவறிய தில்லை. குறையாத தெய்வ பக்தியினுல்தான் அவர் பல முறை விபத்துக்களினின்றும் காப்பாற்றப்பட்டதாகக் கூறியிருக்கிருர்.

## 22. விமான விபத்து

அழகப்பர் பலமுறை விமான விபத்துக்களினின்று தப்பியிருக்கிருர். ஒருமுறை அவர் சென்னையிலிருந்து டில்லிக்கு விமானத்தில் பயணம் செய்ய இருவழி (return) டிக்கெட் வாங்கியிருந்தார். குறிப்பிட்ட நேரப் படி அவரால் அந்த விமானத்தில் பயணம் செய்ய இயல வில்லை. எனவே டிக்கெட் கட்டணத்தைத் திரும்பப் பெறுவது என்று முடிவு செய்தார். அதனுல் அவர் சிறிது பணத்தை இழக்க நேரும். அந்த இழப்பை விரும்பாத அவரது நண்பர்கள் சிலர் குறிப்பிட்டபடி அந்த விமா னத்தில் பயணம் செய்து திரும்பும்படி அவருக்கு ஆலோ

சனை கூறினர். ஆனால் அழகப்பரோ இழப்பைப் பொருட்படுத்தாமல் கட்டணத்தைத் திரும்பப் பெற்றார். குறிப்பிட்ட அந்த விமானம் புறப்பட்டுச் சென்ற சிறிது நேரத்தில் வெடித்துச் சிதறியது. அதில் பயணம் செய்த அத்தனைபேரும் வெந்து மறைந்தனர். நல்ல வேளை! அழகப்பர் விதிவசத்தால் அந்த விமான விபத்தினின்று தப்பினார். அதில் பயணம் செய்யும்படி ஆலோசனை கூறிய நண்பர்கள் பிறகு அழகப்பரைப் பாராட்டி மகிழ்ச்சி தெரிவித்தனர்.

மற்றொரு முறை அழகப்பர் பிரான்சில் ஒரு விமானத்தில் பிரயாணம் செய்துகொண்டிருந்தார். அப்பொழுது அந்த விமானத்தில் ஏறத்தாழ எண்பது பேர் இருந்தனர். திடீரென்று விமான இஞ்சினில் கோளாறு ஏற்பட்டது. அது ஒழுங்காக வேலை செய்ய மறுத்தது. விமானி அபாய அறிவிப்புக் கொடுத்துவிட்டார். எந்தச் சமயத்திலும் விமானம் விபத்துக்குள்ளாகலாம் என்றும், பிரயாணிகள் தங்கள் குலதெய்வத்தை வணங்கிக் கொள்ளும்படியும் கூறப்பட்டது. பிரயாணிகள் அனைவரும் மனம் கலங்கினர். யார்தான் சாக விரும்புவர்? "சாதலின் இன்னாதது இல்லை" என்பது குறள் அல்லவா? எனினும் அழகப்பர் உடன் பிரயாணிகளுக்கு ஆறுதல் கூறினார். உடனே தன் பூசைப் பெட்டியைத் திறந்து அனுமார் படத்திற்குத் தீபவழிபாடு செய்தார். தங்களைக் காக்கும்படி வேண்டினார். பிரயாணிகள் ஆர்வமுடன் அவர் செயலைக் கவனித்து அனுமாரை வணங்கினர். என்ன வியப்பு! சற்றுநேரத்தில் இஞ்சின் கோளாறு நீங்கி விமானம் ஒழுங்காகப் பறக்கலாயிற்று. அடுத்த விமானநிலையத்தில் விமானம் இறங்கிற்று. பிறகு வேறு விமானத்தில் அனைவரும் பயணம் செய்து உயிர் பிழைத்தனர். அன்றுமுதல் அழகப்பருக்குத் தெய்வபக்தி மிகுந்தது.

# 23 அழகப்பரின் பொன்மொழி

"சலவைக் கல்லில் செயலாற்றினல் அது ஒருநாள் அழிந்துபடும். உலோகத்தில் செயலாற்றில் காலம் அதைக் கரைக்கும்; கோயில்களைக் கட்டினல் ஒருநாள் அது மண்மேடாகும். ஆனல் இளம் உள்ளங்களிடம் செயலாற்றினல், உணர்ச்சி யூட்டினல், தெய்வபக்தியை ஏற்படுத்தி மக்களன்பை உருவாக்கினல், அது எக்காலமும் நிலைபெறத் தக்க பணியாகும்" என்று வெப்ஸ்டர் என்னும் அறிஞர் கூறினர். அந்தப் பணியை இடைவிடாது செய்த பெருமை அழகப்பரையே சாரும்!

அழகப்பர் ஒரு சுதந்திரப் பிரியர்! அவர் அண்ணல் காந்தி அடிகளிடம் அளவற்ற அன்புடையவர். சுதந்திரத்திற்கு முன்பு ஒருமுறை அழகப்பர் ஒரு மாநாட்டுக்குச் சென்றுர். மாநாடு முடியும் தருவாயில் அண்ணல் காந்தி அடிகளால் சில பொருள்கள் ஏலத்துக்குக் கொண்டுவரப்பட்டன. மாநாட்டுக்காக ரூ 2000/- செலவில் தயாரிக்கப்பட்ட அழகுக் கொடிகள், திரைச் சீலைகள் முதலியன காந்தியடிகளால் ஏலம் விடப்பட்டன. காந்தியடிகள் ஏலத்தின் முதல் தொகையாக ரூ 5000/. என்றுர். முதல் வரிசையில் அமர்ந்திருந்த அழகப்பர் உடனே ஏலத்தொகையை ஒரு இலட்சம் ரூபாய் என்று கூறினர். கூட்டமே வியந்து பாராட்டிக் கைதட்டி ஆரவாரித்தது. அண்ணல் காந்தியடிகள் கருணையுடன் வள்ளலை நோக்கினர். வேறுயாரும்

ஏலம் கேட்க முன்வரவில்லை. உடனே காந்தி அடிகள் அழகப்பரை அழைத்து, அன்போடு அணைத்துக் கொடிகளை அவரிடம் கொடுத்தார். அழகப்பர் ஒரு இலட்சம் ரூபாய்க்குக் காசோலை வழங்கினார். அன்று அவர் பெற்ற கொடிகள் இன்றும் காரைக்குடியில் கல்லூரி விழாக்களில் தெருவெங்குக் கட்டப்படுகின்றன.

பிறகு நண்பர்கள் சிலர் அழகப்பரிடம் ஏலத்தொகை பற்றி விசாரித்தனர். கொடிக்கு ஒரு இலட்சம் ரூபாய் மிகுதி என்றனர். அப்பொழுது அழகப்பர் கூறியதாவது· "காந்தியடிகளின் அன்புக்கும் அரவணைப்புக்கும் ஒரு இலட்சம் என்ன? எத்தனை இலட்சம் வேண்டுமானாலும் வழங்கலாம்" என்றார். இதிலிருந்து அழகப்பருக்கு அண்ணல்மீது உள்ள பற்றும், சுதந்திர வேட்கையும் புலப்படும்.

1954இல் சென்னையில் நடந்த பட்டமளிப்பு விழாவில் பேருரை நிகழ்த்திய பொழுது அழகப்பர் கூறிய பொன்மொழி வருமாறு: "நாம் சுதந்திர உணர்ச்சி பற்றித்தெளிவாகப்புரிந்து கொள்ள வேண்டும். மனிதன் சுதந்திரமாகச் சிந்திக்கவும், செயற்படவும் அனுமதிக்கக் கூடிய சூழ்நிலை நிலவ வேண்டும். அந்தச் சூழ்நிலைக்கு முன் அளவற்ற செல்வமும், எல்லையற்ற பாதுகாப்பும் கூட ஈடாகாது" என்றார். இதிலிருந்து அழகப்பரின் சுதந்திர இதயம் நமக்குப் புலனாகிறது. சுதந்திர உலகில் தான் அவர் பெரிய வள்ளலாக வளர முடிந்தது என்பதும் நமக்கு நல்ல சான்றாகும்!

# 24 சிறந்த பண்புகள்

அழகப்பரிடம் சிறந்த பண்புகள் பல இருந்தன. அவர் வைகறையில் எழுவார். திட்டமிட்டுக் கடின மாக உழைப்பார். சோம்பலாக இருக்கமாட்டார். எப் பொழுதும் எதையாவது படித்துக்கொண்டும், சிந்தித் துக்கொண்டும், பேசிக்கொண்டும் இருப்பார். பேசும் பொழுது நல்ல கருத்துக்களை நண்பர்களுக்குச் சொல்லி மகிழ்வார். படிக்கும்பொழுது நல்ல இடங்களைக் கோடிட்டு வைப்பார். அறிவு நூல்களையே அவர் படிப்பார்; வெறும் பொழுதுபோக்கு நூல்களை அவர் படிக்க மாட்டார். நாள்தோறும் நீராடியதும் தம் பெற்றேரின் படத்தை வழிபட்டு, இறைவணங்குவார். நெற்றியில் திருநீறு, குங்குமம் இடுவார்.

அடிக்கடி நண்பர்களுக்கு விருந்தளிப்பார். மிகச் சிறந்த நண்பர்களுக்கு அவர் மனத்திற்கியைந்த பரிசுப் பொருள்களை நல்ல நாட்களில் வழங்குவார். கேரளத் துத் தந்தங்களை அவர் மிகுதியாகப் பரிசளிப்பார். செய லாற்றும்பொழுது விரைந்து செயற்படுவார். கடிதம் எழுதுவதைவிடத் தந்தி அடித்துச் செயலாற்றுவதை அவர் விரும்புவார். செலவை விடக் காலம் மதிப் புடையது என்பது அவர் கொள்கை. அவர் தன்னடக்கம் மிக்கவர். எந்த வெற்றியையும் இறையருளால் நிகழ்ந்த தாகவே அவர் சொல்வார். ஆங்கிலத்தில் மிக அழகாகச் சொற்பொழிவாற்றுவார். நல்ல செயல்களுக்கு மன முவந்து கொடை வழங்குவார். சுருங்கச் சொன்னல் அழகப்பர் பண்பின் சின்னமாக விளங்கினர்.

## 25 கால் முறிவு

கேரளாவில் தனது நூற்பாலையில் சில முக்கிய வேலை கருதி அழகப்பர் ஒரு முறை அங்கு சென்றார். ஒரு நாள் ஒரு கட்டடத்தின் மாடியில் உலவிக் கொண்டிருந்தார். அப்பொழுது கால் தவறி மாடியிலிருந்து உருண்டு விழுந்தார். அதனால் கால் முறிந்தது; மயக்கம் ஏற்பட்டது. அதிர்ச்சியால் அவர் மூளை கலங்கியது. பிறகு தீவிரமான முறையில் மருத்துவம் செய்யப்பெற்ற தால் அவர் பிழைத்தார். எனினும் அவர் மூளை கலங்கிய நிலையில் சில திங்கள் பிதற்றிக்கொண்டிருந்தார். இறை யருளால் பிறகு குணமடைந்தார். ஆனாலும் அன்று முதல் அவரது உடல் நலிவடையத் தொடங்கிற்று.

## 26. இறுதிச் சொற்பொழிவு

1957ஆம் ஆண்டில் ஒருநாள் காரைக்குடி அழகப்பா கல்லூரியின் ஆண்டுவிழா திரு. மணவாள இராமானுசம் அவர்கள் தலைமையில் நடக்க இருந்தது. அப்பொழுது அழகப்பர் சென்னையில் இருந்தார். அவரது உடல்நிலை மிகவும் தளர்ந்திருந்தது. உடலில் இரத்தமே இல்லை. எலும்பும்தோலுமாகக் காட்சியளித்தார். படுத்தபடுக்கை யாகவே இருந்தார். தான் சாகுமுன் ஒருமுறையேனும் அவர்தன் கல்லூரியைக் காணவிரும்பினார். எனவே மருத்துவர்களின் ஆணையையும் மீறிக் காரைக்குடிக்குப் புறப்பட்டுவிட்டார். தானே புறப்படவில்லை. படுக்கை

யோடு அவரைக் காரில் தூக்கி வைத்துக் கொண்டு வந்தனர். சென்னை எழும்பூர் நிலையத்தில் பிரமுகர்களும் பொதுமக்களும் அவருக்கு மாலைஅணிவித்து மரியாதை செலுத்திஅனுப்பினர். அதுதான் அவரது இறுதிப்பயணம் என்பதை அப்பொழுதுயாரும்உணரவில்லை. புகைவண்டி காரைக்குடியை அடைந்தது. மாணவர்கள் அனைவரும் அணிவகுத்து நின்று தங்கள் அறிவுத் தந்தையை வரவேற்றனர். படுக்கையில் படுத்திருந்தவாறே அவர் காரில் பயணம் செய்து கல்லூரிக்கு வந்து சேர்ந்தார். மாலையில் விழாத்தொடங்கியது. மேடையில் தலைவர்கள் வீற்றிருந்தனர். அழகப்பரும் மேடையில் ஒருசாய்வு நாற்காலியில் படுத்திருந்தார். வள்ளலின் கொடைச் செயலைத் தலைவர்கள் புகழ்ந்து பாராட்டினர். எல்லோருடைய பேச்சுக்களும் முடிவடைந்தன.

ஆனால் அழகப்பருக்குப் பேசமுடியாதநிலை! மேடையில் பேசத்துடிக்கும் அவர், வாயைத்திறக்க முடியாத வலிவற்ற நிலையில் இருப்பதை மாணவர்களும் அறிவர். என்றாலும் அவரது அறிவுரையைக்கேட்க மாணவர்கள் விரும்பினர். எனவே அவர்கள் எழுந்துநின்று அழகப்பர் பேசவேண்டும் என்று கூச்சலிட்டனர். மாணவர்களது அன்புக்குரலுக்கு அழகப்பர் அடிபணிந்தார். ஒலிபெருக்கியைத் தன்முன் வைக்கச் சொன்னார். அருகில் இருந்த தாயுமானசாமி முதலியபெரும்மருத்துவர்கள் தடுத்தனர். அழகப்பர் சொன்னார்... 'நான் எனது மாணவர்களுக்குப் பேசுவதன் மூலம் உடல் தளர்ந்து சாகவேண்டி நேரிட்டால் அதை மகிழ்ச்சியோடு வரவேற்கின்றேன்'' என்றார். அவரது முடிவை மாற்ற ஆண்டவனாலும் இயலாது.

கணீரென்று பேசத்தொடங்கினர் அழகப்பர். கல்லூரி களின் வளர்ச்சியைப்பற்றிச் சுருக்கமாக எடுத்துரைத் தார். ஆசிரியர்களேயும் மாணவர்களேயும் பாராட்டிநன்றி உரைத்தார். 15 நிமிடம் பேசி இருப்பார். திடீரென்று உடல் ஆடியது. நாக்குழறியது. "வலி வலி" (Pain Pain) என்றுஆங்கிலத்தில் கத்தினர். மூர்ச்சையானர். உடனே மருத்துவர்கள் விரைந்தனர். மேடையிலேயே அவருக்கு ஊசிபோட்டனர். நாற்காலியில் மயங்கிக்கிடந்தார் அந்த மேதை! மாணவர்கள் அவரை நாற்காலியுடன் தூக்கிச் சென்று கட்டடத்தில் சேர்த்தனர். மறு நாள் தான் அவருக்கு நினைவு வந்தது. ஆண்டுவிழா அப்படியே நின்றுவிட்டது. புன்னகை தவழ்ந்த முகங்களில் துக்கம் படர்ந்தது. மறுநாள் அழகப்பர் சென்னேக்கு மீண்டும் தூக்கிச்செல்லப்பட்டார். சிலநாட்களில்அவர்உலகத்தை விட்டே பிரிந்துவிட்டார்.

## 27. இறுதி

கொடைசெய்வதையே தம்வாழ்நாளின் குறிக்கோ ளாகக் கொண்ட அழகப்பர் மிகக்கொடிய நோய்களால் தாக்கப்பட்டு மூன்ருண்டுக்காலம் பெரிதும் துன்புற்ருர். படுத்தபடுக்கையிலும் கல்விப்பணி புரிந்தார்; என்ருலும் மறம்படைத்த கூற்றுவனுக்கு அவரை விட்டு வைக்க மனமில்லே. 5-4-1957 இல் காலன் அவர் உயிரைக் கவர்ந்துசென்ருன். அழகப்பர் சென்னேயிலே இறந்தா லும் அவரது உடல் காரைக்குடிக்குக் கொண்டு வரப் பட்டுக் கல்லூரிவட்டத்தில் எரியூட்டப்பட்டது. அப்பொ ழுது அழுதுபுலம்பியமக்கள் வெள்ளத்தைக்கணக்கிடவே முடியாது. ஏறத்தாழ இலட்சம் மக்கள் அவருக்கு அன்று இறுதி மரியாதை செலுத்தினர்.

# பின்னுரை

சங்ககாலத்துப் பாரிக்குப் பிறகு தமிழகத்திலே தோன்றிய தனிப்பெரும் வள்ளல் அழகப்பரே ஆவார். அவருக்கு ஈட்டவும்தெரியும்; ஈயவும்தெரியும். இருதுறை அறிவும் நிரம்பப்பெற்ற அவர் இருபதாம் நூற்றுண்டு பெற்ற கண்கண்ட தெய்வமாவார்! அவருடையவாழ்க்கையும், கொடைச் செயல்களும், பிறரால் நம்பமுடியாத அளவுக்கு உயர்ந்தவை. அவர் வளர்த்து விட்ட இளம் உள்ளங்களில் என்றும்தெய்வமாகத் திகழ்கிருர். அவரது கல்லூரியில் கல்வி கற்றுப் பட்டம் பெற்ற என் உள்ளக் கோயிலில் அவர்காலத்தால் மறையாத கவின்பெரும் சிலையாகக் காட்சியளிக்கிருர். நானும் பாமாலை சூட்டி அவரைவழிபடுவதில் பெருமை அடைகிறேன்.

## 28. அழகப்பருக்கு அறிஞர்கள் சூட்டிய புகழ்மாலை

**நினைவுச் சின்னம்**

“ அழகப்ப செட்டியார் நல்ல தொழில் மேதை. தம் நுண்ணறிவால் நாட்டுத் தொழிற்கல்வி வளத்திற்குத் தாராளமாக வழங்கி நாடுவளரப் பணிபுரிந்துள்ளார். தமக்கென்று நிலையான நினைவுச் சின்னத்தைத் தம் தொண்டுகளால் நிறுவி விட்டார்.

—டாக்டர் இராதாகிருஷ்ணன்

### சிறந்த நூல்

டாக்டர் அழகப்பச்செட்டியார் மனமுவந்து தாராள மாக வழங்கியுள்ளார். பாடுபட்டுத்தேடிய பணத்தை அறப்பணிக்கு வழங்கும் இம்மாண்பை மாணவர்களும் உணரவேண்டும். அழகப்பருடையவாழ்க்கை ஒருசிறந்த நூல்! நல்லசெயல்களை நாடிவழங்கும் நற்பண்பை இந்த நூலிலிருந்து மாணவர்கள் படிக்கவேண்டும். அவர் வாழ்வில் கண்ட துணிவையும் மனப்பண்பையும் மேற் கொள்ளவேண்டும்.

—திரு. சி. இராசகோபாலாச்சாரியார்

### சொந்தச்சொத்து

டாக்டர் அழகப்பச்செட்டியார் ஒருவர்தாம் தமக் கென்று சொத்துச்சேர்த்தவர் ஆவார்; பிறர்எவரும் தமக் காகச் சொத்துச் சேர்க்கவில்லை என்றுகூறலாம். ஒருவரு டைய சொத்து, செல்வம்அவருக்குப்பிறகுஅவரதுவாரிசு தாரர்கட்குப் போய்விடுகிறது; சுற்றத்தார்களைச் சென்று சேர்கிறது. பிறகு அச்செல்வம் யாரை அடைகிறதோ அவருடைய செல்வம் ஆகிவிடுகிறது. முன் யாரிடம் அது இருந்ததோ, அவர் பெயரால் அச்செல்வம் அழைக்கப் படுவதில்லை. அந்தநேரத்தில் யாரிடம் இருந்ததோ அவருடைய செல்வம் என்றே உலகம் கூறும்.

டாக்டர் அழகப்பசெட்டியார் தமதுவள்ளன்மையால் கட்டியுள்ள பல்வேறு கல்வி நிலையங்களே உண்மையில் அவருடைய சொத்தாகும். இது என்றைக்கும் அவரை விட்டு அகலாது. இக்கல்லூரிகள் அவர் பெயரையும் புகழையும் என்றும் உலகிற்குஎடுத்துக்கூறும். இவ்வாறு எக்காலத்தும் தமக்குரியசொத்தாக விளங்குமாறு தமது செல்வமனைத்தையும் நல்வழியில் பயன்படுத்திய அவரை நான் பாராட்டுகின்றேன்.

—பெரியார் ஈ. வே. ரா.

முற்றிலும் பொருத்தம்

"எல்லா வகையிலும் தலைசிறந்த தொழில் துறை அமைப்பாளராகிய அழகப்பச்செட்டியார் தாம் அமைத்த கல்விக்கூடங்களுக்குத் தம் வாழ்நாளின் ஒவ்வொரு விநாடியும் மனமும்கொண்ட கொடைவள்ளல் என்ற புகழுக்கு முற்றிலும் பொருத்தமானவர் என்று துணியலாம்"

—டாக்டர் விசுவேசுரய்யா

தென்னாடு உணரவேண்டும்!

"காரைக்குடியில் கல்லூரியை நிறுவத் தாராள மனத்துடன் முன்வந்து அழகப்பச்செட்டியார் பண்பாட்டையும் கல்விச் செல்வத்தையும் கிராமச் சூழ்நிலையின் வாயிற்படிக்கே கொணர்ந்து விட்டார். அழகப்பாகல்லூரி வட்டம் நாளுக்குநாள் வளர்ந்து உயர்ந்து வருகிறது. டாக்டர் அழகப்பச்செட்டியாரது தொண்டின் பெருமைகளைத் தென்னாடு நன்குணர வேண்டும்."

—டாக்டர் இலட்சுமணசாமி முதலியார்.

வாழ்வின் வளம்!

வாழ்க்கைக்கு வேண்டிய இன்றியமையாத வளங்களைவழங்கும்வல்லமை பெற்றவை காமதேனுவும் கற்பகத்தருவும் என்றுகேள்விப் பட்டிருக்கிறோம். ஆனால் டாக்டர் அழகப்பச்செட்டியாரிடம் இவ்விரண்டும் வற்றாத வளங்களின் தன்மை பொலிவதைக் கண்கூடாகக் காண்கிறோம்."

டாக்டர் பட்டாபி சீதாராமய்யா.

# 29 பாவலர் சூட்டிய பாமாலை

**எட்டாம் வள்ளல்!**

ஆலயங்கள் கட்டுவதும் அவற்றின் முன்னர்
அருங்குளங்கள் வெட்டுவதும் அறவழிக்குப்
பாலமென நினைத்திருந்த செட்டி நாட்டைப்
பார்வையிடப் பிறந்தவனே அழகன், வள்ளல்
கோலமிகு திருப்பணிகள் போதும், அங்கே
குடியிருக்கும் கடவுளரும் போதும், என்ற
காலத்தை உணர்ந்தவனாய்க் கருத்தில் ஆழ்ந்தான்
காரிருளில் அறிவொளியைப் பரவச் செய்தான் 1

பணம்நிறைத்துப் பெட்டகத்தைத் திறந்து பார்த்துப்
பல்விரித்து மூச்செறிவார் பெருகும் நாளில்
பிணமாகும் வரைக்குமவன் அள்ளி அள்ளிப்
பிறர்வாழக் கொடுத்தானே, எப்படித்தான்
குணமிதனைப் பெற்றானோ! குடியிருந்த
கோதையவள் மணிவயிற்றின் பெருமை தானோ!
அணங்கவளை வணங்குகிறேன், அவளே மூலம்!
அவள்தானே அழகனையே நமக்குத் தந்தாள் 2

இறந்தானோ அழகப்பன்! இதய மேசொல்!
இல்லைஅவன் இருக்கின்றான் காரை மண்ணில்
அறக்கூடம் கலைக்கூட மாக அங்கே
அறிவுபெறும் செல்வங்கள் உள்ள மாகத்
திறங்காட்டிச் சிரிக்கின்றான் புகழின் உச்சித்
திருவிளக்காய் ஒளிர்கின்றான், இறக்க வில்லை
புறம்புகழும் கடையேழு வள்ள லோடு
பெயரிணைத்து வாழ்கின்றான் எட்டாம் வள்ளல்! 3

—கவிஞர் பெரி. சிவனடியான்

# 30. எமக்கினிய அழகப்பன்!

தாமறிந்த மொழிகளிலே தமிழைப் போல
நலங்கனிந்த இன்மொழிவே றில்லை போலப்
பாமலிந்த தமிழ்மொழியின் குறளைப் போலப்
பாரகத்தில் வேருருநூ லின்மை போல
யாமறிந்த கொடைஞரிலே அழகப் பன்போல்
யாவையுமே கொடுத்துயர்ந்தார் யாண்டும் இல்லை;
தேமதுரத் தமிழ் மொழிதான் உள்ள மட்டும்
திகழ்ந்திடுமே அவன்திருப்பேர் கீர்த்தி வாழ்க! 1

பாடாத முல்லைக்குத் தேரை யீந்த
பாரிவேள் பிறந்ததமிழ்ப் பறம்பு நாட்டின்
வாடாத வண்மைக்குச் சான்று காட்ட
வாழையடி வாழையென வந்த வள்ளல்
கோடானு கோடிதொகை கொடுத்துக் கல்விக்
கோவில்கள் பலஎடுத்துக் கற்றோர் நெஞ்சம்
ஏடாகத் தன்புகழை எழுதும் வீரன்
எமக்கினிய அழகப்பன் ஏற்றம் வாழ்க! 2

—புலவர் பூ. அமிர்தலிங்கன்

# 31. உயிரும் ஈந்தான்!

அள்ளியள்ளி வழங்குதற்குக் கையை ஈந்தான்
அழகாகப் பேசுதற்கு வாயை ஈந்தான்
உள்ளமெனும் ஒருபொருளை உரத்துக் கீந்தான்
உடம்பினையும் கொடுநோய்க்கே ஈந்தான் அந்தோ!
வெள்ளமென வருநிதியம் வாழும் வீடு
வினைமுயற்சி அத்தனையும் கல்விக் கீந்தான்
உள்ளதென ஒன்றில்லை அந்தப் போதும்
உயிருளதே கொள்க எனச் சாவுக் கீந்தான்.

—கவிஞர் முடியரசன்

# 32. சந்தனத்தின் செழுங் கொம்பு

(கவிஞர் அரு. சோமசுந்தரன்)

தினவெடுக்கும் தமிழ்த்தோள்கள்; பரந்தநெற்றி
தித்திக்கும் ஆங்கிலத்தில் தொடர்ந்த பேச்சு
மனமெலாம் அறம்செய்யும் ஆழ்ந்த ஆசை
மாட்சியிலே இமயத்தை நிகர்த்த உள்ளம்
இனமின்றிக் கேரளத்தில் தமிழர் நாட்டில்
எந்நாளும் கலைவளர்க்கும் பரந்த நோக்கு
வனமெல்லாம் மாளிகையாய், வயல்கள் தாமாய்
வளர்க்கின்ற திட்டத்தான்; முயற்சி வேந்தன்! 1

கோட்டையூரில் நீபிறந்தாய்; வளர்ந்த போது
கூடமொன்று கல்விகற்க அங்கு காணும்
கூட்டைவிட்டு நின்றனுயிர் பறந்த காலை
கோட்டையூரில் கன்னியர்க்கும் கல்வி தந்தாய்!

நாட்டினிலே நாற்பதாண்டில் உன்னை ஒத்த
நற்சேவை செய்த பெரும் வள்ளல் இல்லை
தோட்டிமுதல் குடியரசுத் தலைவர் ஈராய்த்
தொண்டனுனை வாழ்த்துகிருர் வாழ்க மாதோ! 2

அருமையுடன் நின்பெயரைச் சொல்ல நல்ல
ஆண்மகவு தோன்றவில்லை என்ற சின்னஞ்
சிறுகுறையை நின்செவியில் போட்டபோதும்
சிரித்தபடி சிறுவிரலைச் சுட்டிக் காட்டிப்

பொறுப்புடனே வகுப்பறையில் கல்வி கற்றுப்
போகின்ற நல்லிளைஞர் வரிசை நோக்கி
"விருப்புடைய ஆயிரவர் இவர்தாம் என்றன்
விழுப்புதல்வர்'' என்றுரைத்தாய்; நீதான்புத்தன் 3

"அடுப்பூதும் பெண்களுக்குக் கல்வி வேண்டாம்;
அவர்நாளும் ஆண்களுக்கே அடிமை'' என்ற
கொடுக்குநிறை தேள்கூட்டக் கொள்கை தன்னைக்
கோட்டையூரில் அழித்துவிட்டாய்; அங்கே மூலை

முடுக்குதொறும் புத்தகத்தை ஏந்தி, வான
முழுநிலவாய்ப் பவனிவரும் பெண்கள் கூட்டத்
தொடுமினிய குயிற்பேச்சுக் குரலைக் கேட்டால்
தோலுரிந்த பழமையதும் ஓடக் காண்போம்! 4

சென்னையிலே தமிழ்த்தலைவன் வாழ்ந்திட் டாலும்
சிந்தையெலாம் கல்லூரி வட்டந் தன்னுள்
என்ற உண்மை அறிந்ததனால் தமிழ மாந்தர்
இருநூறு கல்தொலைவும் எடுத்து வந்து
நன்றாய கலைமண்ணில் சிதைய மைத்து
நாளெல்லாம் அவனங்கே வாழச் செய்தார்
பொன்மேனி கடைப்பயணம் புறப்பட் டாலும்
புகழ்மேனி பாரகத்தே வாழ்ந்தி டாதோ? 5

சகடக்கால் செல்வமெனச் சங்கம் சொல்லும்
சரித்திரமும் அதைநிறுவிச் சான்று காட்டும்
பகடுபல நடந்தகூழைப் பலரோ டுண்ணப்
பயிற்றுவிக்கும் வள்ளுவனின் குறள்கள் தாமும்!
அகம்புறங்கள் கூறுமதை உண்மை யென்றே
அனைத்துலகும் பறைசாற்றி வாழ்ந்து காட்டி
அகமகிழ அறம்புரிந்தே அமர னானாய்!
அழகப்பா!! உனதருமை சொல்லொ ணாதே! 6

கொடுமையெனும் கூட்டில்வாழ் கூற்றத் தீயோய்!
கொன்றனையே இளைஞரினத் தந்தை தாயை!
நடுநகரப் பழுமரமாய்த் தொண்டு செய்த
நந்தலைவர் உன்கரத்தால் துவண்டு வீழ்ந்தார்
படுகிழவர் பலரீண்டு வாழ்ந்தி ருக்கப்
பைங்கிளிதான் உன்கண்ணிற் பட்ட தாமோ?
சடுகுடு நீ விளையாடிச் சாய்த்து விட்ட
சந்தனத்தின் செழுங்கொம்பைக் காண்ப தெப்போ?

அன்பு, பணி, அறமிவற்றை மூச்சாய்க் கொண்ட
அழகப்பப் பெருந்தகையே! உன்னைக் காலன்
தின்றொழித்தான் எனக்கேட்கும் போது நாங்கள்
தீப்பொறியாய்த் திகழ்கின்றோம்; தெவிட்டாத்
[தேனே!
மன்பதையில் நீ பிறந்தாய்; மடமை மாய்ந்தான்
மாற்றாரும் போற்றவரும் இறுதி நாளில்
சென்றனை நீ எனும்எண்ணம் அரும்பும் போது
செயலற்று வருந்துகிறோம்; செய்வ தென்னே? 8

குவலயத்தின் விடிவெள்ளி மறைந்த தம்மா!
கொம்புத்தேன் கூட்டினையே காலன் கொண்டான்
சுவர் நடுவே வரைந்திருந்த ஓவி யத்தை,
செந்தமிழ்த்தாய் முகத்திலுறு முறுவ லிப்பைக்
கவர்ந்தனனே பேராசைக் கூற்றத் தீயோன்?
காவிரிநீர் வளம்சுரக்கும் தமிழர் நாடு
தவம்புரிந்து பெற்றபாரி தவழு நாளில்
தரைமறந்தான் என்ற சொல்லைக் கேட்க லாமா? 9

உலகறிந்த தமிழ்த்தலைவ! உன்னை நாங்கள்
ஒருபோதும் மறந்கதில்லை; நீம றந்தாய்
உலர்ந்தழிந்த பாலைமண்ணில் ஊற்று நீராய்
உருவெடுத்தாய்; உனதழிவு பொறுப்ப தாமோ?
புலர்ந்தபர்ந்த நாவினாலே நினது வெற்றி
புகல்வதெனில் பாரதிதான் பிறக்க வேண்டும்
மலர்ந்திருந்த மல்லிகையின் மணத்தில் நாங்கள்
மகிழ்ந்திருக்க, மல்லிகைதான் வாட லாமா? 10

கேரளப்பல் கலைக்கழகம் தமிழுக் காகக்
கேட்டதுண்டே ஒருலட்சம்; எடுத்து விட்டாய்
தீரமுடன் பொறியியற்கல் லூரி கண்டாய்
திகழுகின்ற மின்னியலின் ஆய்வுக் கூடம்
வீரமுடன் தலைநிமிர்ந்து விளங்கு தற்கு
விரைந்தளித்தாய் பதினைந்து லட்சம் முன்னாள்
ஈரமுடன் நீ செய்த கொடையை எண்ணின்
எந்நாளும் கணக்கிடுதல் இயலா தம்மா! 11

கலைத்தொண்டன், மறைந்திட்டான்; ஆனால் அன்னோன்
கடைவிருப்பம் நிறைவேற்றிக் காண வில்லை
மலைபோல அவன்வளர்த்த மக்கள் நாம்தான்
மன்னுசை ஈடேற்றல் வேண்டும் வேண்டும்!
அலையலையாய் நாமெல்லாம் ஒன்று கூடி
அன்புடனே மருத்துவக்கல் லூரி கட்டிச்
சிலையெழுப்பிப் பல்கலையின் கழகம் கண்டு
சிந்தையெலாம் அவன்குளிரச் செய்தல் வேண்டும்!

முன்னவர்கள் ஈட்டியதோர் செல்வ மெல்லாம்
முழுமனதாய்க் கொடைகொடுத்த வள்ள லுண்டு
தன்னளவில் பாடுபட்டுப் பொருளை யீட்டித்
தமிழ்வழியில் கொடைகொடுத்த தன்மையுண்டு
பின்னவர்கள் தொல்லையுறக் கடன்கள் வாங்கிப்
பெருங்கொடைகள் செய்தபெருங் காட்சி யுண்டு
மன்னுலகில் பிறர்க்குரிய சொத்தி னின்று
மழையெனவே வழங்கியமா மனித ருண்டு! 13

வரவுவரும் பொருளையெலாம் வாரி வாரி
வழங்குதலே வள்ளலெலாம் கற்ற பாடம்!
வரவுவரும் முன்பேநம் அழகு வள்ளல்
வண்மையுடன் கொடையெழுதி வைத்த தாலே

நீர்முடைய கொடைவழியைத் தோற்று வித்தான்
தகுதியுடன் கொடையுலகைத் திருப்பி விட்டான்.
உரமுடைய தமிழ்உள்ளத் துயர்ந்த வள்ளல்
ஓங்கியசீர் அழகப்பன் உழைத்த வள்ளல் 14

சங்கநிதி பதுமநிதிச் செல்வ ஞனுய்
சலியாமல் ஈந்துபெரும் வள்ள லானுய்
மங்கலஞ்சேர் கல்விநெறித் தலைவ ஞனுய்!
மறத்தமிழர் உளங்களிலே தெய்வ மானுய்
பொங்குகடல் போற்பரந்த உள்ளம், ஈயும்
போதையினுல் துடிக்குமிரு கைகள், நாட்டைச்
சிங்கமென பாற்றுமறப் பார்வை, கொண்டு
தேசமெலாம் வென்றபுகழ் "அழகன்" வாழ்க!" 15

[வேறு]

கால வெள்ளத்தைக் கடந்துநீ அழகப்ப போவாயோ?
ஞால முழுவதும் அழுது புலம்பிடச் சாவாயோ?
ஆல மரத்துயர் தன்மையைப் போலநீ வாழாமல்
ஓல மெழுப்பியே உலகு வருந்திடச் சென்ருயே 16

கண்ணைப் பறித்துநின் னுயிரைப் பறித்ததீக் காலனையே
மண்ணை மிதிப்பது போல மிதித்தே மாய்த்திடுவோம்
விண்ணை விட்டினி வீரன்க் காலனும் வருவானேல்
புண்ணை அழிப்பது போல அழித்துப் பொசுக்கிடுவோம்"

கால வெள்ளத்தைக் கடந்திடும் ஆராய்ச்சிக் கூடங்கள்
ஞாலம் போற்றிடும்பொறியியல் தொழில்நிலை மாடங்கள்
ஆல மரத்துயர் தன்மையைப் போலவே அமைத்தாய்நீ
நீல மணிமிடற் றண்ணலை அழகப்ப! வென்ருய் நீ;

—கவிஞர் அரு. சோமசுந்தரன்

# 33. அழகன் ஒரு கவிஞன்

(கவிஞர் கூத்தரசன்)

காட்டையெலாம் மிகமுயன்று திருத்தி நல்ல
கழனியெனும் நிலையடையச் செய்த பின்னர்
கோட்டையூரான் அழகப்பன் கலையின் கோமான்
குன்றனைய புகழுடையான் விதைத்த வித்து
நாட்டையெலாம் தழைய வைக்கும் கல்வி யென்னும்
நலங்கனியும் சோலையென நிற்க, நாட்டுக்
கோட்டையிலே அழகப்பன் புகழை எண்ணிக்
குளிர்தமிழிற் பாமாலை சூட்டு வோமே! 1

[வேறு]

பாண்டிய நாட்டின் பழம்பதியாம்—பா
ராட்டும் கோட்டையூர் வாழ்கலைஞன்
ஈண்டிய செல்வம் மிகவுடையான்—நாம்
என்றும் மறவாத் தலைவனவன் 2

கலையினை வாழ்விக்கும் காவலனும்—கலைக்
கல்லூரி தோற்றிய மேன்மகனும்
விலையிலா ஒண்புகழ் கொண்டவனும்—என்றும்
வெற்றிக் களிப்போடு நின்றவனும். 3

கல்வி வளர்க்கும் காவலனும்—தமிழ்க்
கற்பகமாம் செயல் அற்புதமாம்
செல்வ மகன்புகழ் பாடுதற்கே—இவண்
சேயிழையீர் வந்து கூடுவீர் 4

வாழியவன் புகழ் வாழியவே—நாளும்
வளர்கலைக் கோயிலும் வாழியவே
வாழியவன் கொடை வாழியவே—என்றும்
வாழும் தமிழ்போல் வாழியவே 5

[வேறு]

தென் பொதிகைச் சந்தனத்தின் தெய்வமணம் கமழும்
தென்பாண்டி நாட்டரசன் கோட்டையூரின் சீமான்
மன்பெரிய இவ்வுலகில் தன்பெயர்தான் மன்ன
மன்பதையோர் பாராட்டத் தன்பொருளை ஈந்தோன்
செந்தமிழர் திருநாட்டின் செல்வமகன் அழகன்
செழுங்கலையைத் தாங்குதற்கு வழங்குகின்ற வணி[கன்
கொந்தலரும் பூமாலை வாடிவிடும் அதனால்
குலவுதமிழ்ப் பாமாலை புனைந்திடுவோம் அம்மே! 6

பெண்கல்வி வளர்வதற்குப் பேருழைப்பைத் தந்தான்
பெறுகவெனத் தன்வீட்டைக் கொடையளிக்க [வந்தான்
கண்களென நினைத்தபடி கலைவளர்த்த வேந்தன்
கல்விக்கே கொடுத்ததனால் கைசிவந்த வள்ளல்
மண்ணுலகம் அழகனைப் போல் இதுவரையில் எங்கும்
மகனொருவன் பெற்றதிலை என்றமொழி தங்கும்
விண்ணுயர்ந்த புகழ்பாடிக் கலைத்திறனைப் பாடி
விழியனைய தமிழ்மொழியால் வாழ்த்திடுவோம் [வாரீர்! 7

வள்ளல் அழகன் ஒரு
வழங்கும் கொடையரசன்
அள்ளக் குறையாமல்—கிளியே
அவன் வழங்கும் கல்விநிதி 8

செல்வத்தை ஈட்டியவன்
செயலினை என்னவென்பேன்
கொல்வித்தான் அறியாமை—கிளியே
குமணனுக்கும் மிக உயர்ந்தான் 9

கண்ணின் தூரமெலாம்
கல்லூரி காணுதடி
எண்ணில் ஒரு கலைஞன்—கிளியே
ஏற்ற மிகு தலைவனடி 10

அழகன் கொடைக்குப் பின்
அருட் கொடைகள் ஏதுமிலை
பழகும் தமிழ் உலகில்—கிளியே
பாரிமகன் ஏன் மறைந்தான்? 11

செல்வக் கிளியே உன்
செம்பவழ வாய்திறந்து
வல்லான் அழகனையே—கிளியே!
வளர் தமிழிற் பிறக்கச் சொல்! 12

# 34. அழகன் ஒரு கல்வியாளன்

(கவிஞர் சபாபதி சிதம்பரம்—தேவகோட்டை)

### ஆசான் வணக்கம்

உறவு நிலை நட்பில், உள்ளமெலாம் துய்க்க
உயர்கவிஞன் சோம சுந்தரனும் ஆசான்
பரிவுநிலை காட்டிப் பழகிவருங் காலை
பாவினிலே ஓசை பருகுதற்கே ஆசை
கருத்துடனே சொல்லிக் கட்டிவைத்தான் என்னை
கணப்பொழுதில் அவளும் கூடிவிட்டாள் பாவில்.
செறிவுடைய ஆசான் சேர்ந்தவிதம் என்னே!
செங்கீரைப் பருவம் செலுத்துகிறேன் வணக்கம். 1

### அழகன் பெருமை

முன்னாளில் கண்ட மூவேந்த ரெல்லாம்
முடிவேந்தர் ஆன தாலே
ஒன்றான ஆணை உடனேயே பாயும்
ஒருமித்த செயலு மாகும்
இந்நாளில் அந்தமுடிவேந்த ரெங்கே?
இயல்பான பணியு மேது?
என்றேங்கும் நாளில் அம்மூவர் சேர்ந்தே
எழில் வள்ளலான அழகா! 2

மலைமீது தோன்றி சுனைவாயில் பாய்ந்து
வனம் நோக்கி வந்த நதியோ!
கலைமீது நின்றன் ஒளியான மனமும்
கண்ணாறு போலப் பாயத்
தலையாய கல்வி நிலையான அறிவு
தான் பெற்ற பேறு தூண்ட
அலை வீசும் ஈகை கலையாகத் தோன்றி
அகிலத்தைக் காத்த அழகா! 3

[வேறு]

புவனத்தில் தம்புலமைச் செல்வந் தன்னில்
பொதுநன்மைக் கென்றளித்த தமிழர் பல்லோர்
அயர் வரிசை சொல்லுகிறேன் அகிலத் தீரே!
அதில்மூத்தோன் பச்சையப்பன் ஆன தீரன்
அவனடுத்து வந்தவனே அரசன் ஆவான்
அகிலத்தே முன்பிறந்த ஆன செல்வர்
அவர்களுமே மனமுவந்து கல்விக் காக
அளவறிந்தே ஈந்திட்டார் அதுதான் உண்மை 4

இருந்தாலும் எனையடுத்த கல்வி யாளன்
ஏற்றமிகு அழகப்பன் பெயரைச் சொன்னால்
கரும்பினிலே கண்டுவிட்ட சாற்றைப் போலக்
கற்கண்டாய் இனிக்குதடா கருத்தி னுள்ளே!
உருவெடுத்துப் பெருகிவரும் செல்வ மெல்லாம்
உயர்கல்வி வளர்ச்சிக்கே என்று சொன்னான்
தருவெனவே ஓங்கி நின்று பூத்துக் காய்த்துத்
தழைமுதலாய்ப் பழமுமெலாம் கல்விக் கீந்தான் 5

கசடதப எழுத்துக்கள் ஒன்ருய்க் கூட்டிக்
காட்டிநிற்கும் கருத்துக்கள் கற்ருல் மட்டும்
கசடுவழி நீங்கினதாய் ஆகிப் போமோ?
கற்றுவிட்ட அறிவதுதான் யாருக் காகும்?
பசப்புநிலை எடுத்துரைப்பார் படித்த போதும்
படுபொருளைக் குவிப்பதுதான் அன்ஞர் வேலை
கசகர்ணம் போட்டாலும் கருணை காட்டார்
காலணுவும் பிறர்க்கீயார் சொத்துச்சேர்ப்பார் 6

கல்விஎனில் அதுநீதி காட்ட வேண்டும்
காட்டிநிற்கும் பாதையிலே செல்ல வேண்டும்
பல்பொருளைப் பார்த்துணரும் பான்மை வேண்டும்
பாருக்கும் அதனுலே நன்மை வேண்டும்
நல்லுருவாய் நாம்காணும் கல்வி யாளன்
நலமார்ந்த கல்வியினைக் கற்று நின்ருன்
கல்விஎனும் நீள்கடலில் நீந்தி நின்ருன்
கருணைஎனும் முத்ததனை ஏந்தி நின்ருன். 7

கல்விதனை நாட்டவந்த கல்வி யாளன்
கருணையதைத் தன்மனத்தே கொண்ட போதும்
பல்தொழிலை நடத்திவந்த பான்மையாலே
பார்கடந்து பறந்துசென்ற பக்க மெல்லாம்
நல்லதந்த ஒளிமனத்தே நின்றே யாடும்
நற்கூடம் அவன்முன்னே வந்து நிற்க
வல்பொருளை வடித்தெடுத்தே ஒன்ருய்ச் சேர்த்து
வகைப்படுத்தி வைத்திட்டான், கல்வி யாளன் 8

நான்மறைகள் உரைக்கின்ற மொழியைக் கொண்டு
நானிலத்தே நின்மக்கள் உவந்து வாழத்
தான்பெற்ற அறிவனைத்தும் பெறுக வென்றே
தகுதியுடன் புரிந்தபெரும் ஈகை யாள!
வான்பொழியும் மேகம்போற் கரத்தால் இங்கு
வாரிமிக வழங்கியதால் வள்ளற் கல்வி
ஆன்மாவைத் தொட்டிடுமோர் ஞானக்கல்வி
அருட்கல்வி எவண்பெற்றாய் அழகப் பாநீ? 9

உன்னதமாய் உறவுகொளும் கல்வி கற்றாய்
உடன்பிறந்தார் உயர்வுபெற ஆசை யுற்றாய்
அன்னபிற ஆறறிவால் அளக்க லுற்றாய்
அமரன் நீ கலைக்கோமான் பேரும் பெற்றாய்
நன்மைதரும் ஆசையெலாம் ஒன்றாய்க் கூட்டி
நானிலத்தே நட்டுவைக்கக் கல்வி கற்றாய்
உன்னையொரு கல்வியன்னை என்றே காண
அன்னையுனைப் பெற்றெடுத்தாள் அவனி காக்க 10

வம்பளந்து வீண்கதைகள் பேசிப் பேசி
வகையறியா வழியினிலே சென்று வீழ்ந்து
தம்பொருளைச் சீட்டாடிச் செலவு செய்வார்
தவறான இழிசெயலால் கூடி நின்றே
அம்பலத்தில் ஆடுகிற மக்கள் கூட்டம்
ஆனகல்வி பெற்றிலரே என்றே நொந்து
நம்பெரிய நாயகனும் கல்வி யாளன்
நடைபோட்டான் தன்வாழ்வைக் கல்விக் காக 11

[வேறு]

நன்ருய்த் தொகுத்தான் அடிப்படையை
நர்சரி, தொடக்கம், உயர்கல்வி
பின்னும் கொடுத்தான் பி. யு. சி.
பி. ஏ., பீ. காம்., பி. எஸ்ஸி,
இன்னும் பலபல உரைக்கின்றேன்
எம். ஏ. பீ. ஈ., பாலிடெக்,
திண்ண முடனே கற்பிக்கத்
தீரன் அழகன் வழிசெய்தான் 12

சேயே! சுடரே! எழுந்திடுவாய்
செஞ்சொற் கல்வி பயின்றிடுவாய்
நீயே இந்திய நாட்டிலுயர்
நிலைபுகு மாட்சி நடத்திடுவாய்
தாயே உனக்கினிக் கவலையில்லை
தரணி செழிக்க வாழ்ந்திடுவாய்
நீயே உலகின் உறைவிடமாய்
நிறைவளம் கொழிக்கும் சீர்பெறுவாய் 13

தொழிற்படிப் பொன்றைக் கற்றிடவும்
தொலைவழி துருவம் கண்டிடவும்
மொழிவழித் துறையில் முன்சென்று
முதியோர் நல்லுரை பகர்கின்ருர்
வழிப்படி யதனைக் கற்றிடவே
வளம் நிறை அழகன் அமைத்திட்டான்
வழிநாள் பயிர்கள் வளம்பெறவே
வாஞய் அழகன் அமைத்திட்டான். 14

# 35. அழகன் ஒரு தொண்டன்

(கவிஞர் ந. செல்லப்பன் திருச்சி)

செந்தமிழ்த் தொட்டிலிலே வளர்ந்து—நறுந்
தீஞ்சுவைப் பாட்டினிலே கலந்து
அந்தமில் கற்பனை வான்மிதந்து—நெஞ்சை
அள்ளிடும் தேன்கவி தான்புனைந்து
அன்புடன் தந்திடும் பாவலர்க்கும்—அதை
ஆசையாய்க் கேட்டிடும் யாவருக்கும்
என்னை உயர்த்திடும் தமிழனுக்கும்—இங்கே
என்தலை தாழ்த்தி வணங்குகிறேன் 1

(வேறு)

கல்வி தரும்பயனோ கோடி—அதைக்
கற்று நலம்பெறுவோம் நாடி
செல்வி நமைவந்து சேர்வாள்—இன்பம்
சேர இனியஅருள் கூர்வாள் 2

கல்வி நிறைந்தொளிர வேண்டும்—இங்கு
கற்றோர் மலிந்துயர வேண்டும்
செல்வம் அதற்குதவ வேண்டும்—நாம்
தினமும் பணிபுரிய வேண்டும் 3

எங்கும் அருள்வெள்ளம் ஊறும்—பெரும்
இன்பம் நமைநாடிச் சேரும்
பொங்கும் மகிழ்வுதய மாகும்—மிகப்
பொல்லாப் பசிக்கொடுமை சாகும் 4

குற்றம் நமைநீங்கி ஓடும்—கலை
கொஞ்சிச் சிரித்து விளையாடும்
சுற்றம் தினம் வந்து கூடும்—அன்பு
தோன்ற நமைவாழ்த்திப் பாடும் 5

சிறுமை மனமுடைய தீயர்—பெரும்
தீயிற் புழுவெனவே மாய்வர்
வறுமைப் பிணிதேய்ந்து போகும்—உலக
வாழ்க்கை வளம்நிறைந்த தாகும் 6

கப்பும் இருள்விலகி மாயும்—புவி
காணும் அறிவொளியில் தோயும்
ஒப்பும் ஒருகுலமாய் மாறும்—அன்பு
ஒன்றே கொழுகொம்பாய்ச் சாரும் 7

(வேறு)

இந்தவகை எண்ணியுயர் கல்விநல மேறச்
சிந்தையிலே உந்தியெழும் சீருடைய பண்பால்
சொந்தமென வந்தபொருள் அத்தனையும் தந்த
தந்தையென எம்மழகன் தாரணியில் நின்றார் 8

கொஞ்சமதோ கொஞ்சமதோ கொட்டியநற் செல்வம்
நெஞ்சினிலே தோன்றியநல் நேயமிகும் ஆசை
மிஞ்சிவர எம்மழகர் மேதினியில் என்றும்
விஞ்சையுயர்த் தோங்கியொளி மேவவகைசெய்தார் 9

தொண்டுமனங் கொண்டுலகில் நின்றுதொழில்செய்தார்
விண்டலமும் மண்டலமும் மேவுபுகழ் கொண்டார்
கண்டெனவே கல்வியினை எண்ணரியதில் மோதும்
வண்டெனவே மாணவர்கள் மொய்க்கவழி கண்டார் 10

(வேறு)

காயுதிர் தோட்டங்கள் ஆக்கலாம்—நல்ல
கனிமரச் சோலைகள் சேர்க்கலாம்
கோயில்கள் ஆயிரம் கட்டலாம்—தண்ணீர்க்
குளங்களும் ஆயிரம் வெட்டலாம் 11

சத்திரம் பற்பல வைக்கலாம்—பல
சாத்திரத் திருவிழா அமைக்கலாம்
எத்தகு புண்ணியம் கூடினும்—இங்கே
எழுத்தறி விப்பதற் கீடெது? 12

பாரதி அன்றிதைப் பாடினார்—அழகர்
பாரில் இதைச்செய்து காட்டினார்
நேரவர் தூற்றினும் அச்சமோ—அவர்
நிந்தை இவர்க்கொரு துச்சமே! 13

பூமியில் வாழ்ந்திடும் மானுடர்—பரி
பூரண நல்லொளி தான்பெற
ஏமுற நாடிப் பணிசெய்தார்—கல்வி
என்றொளி வீசும் அணிசெய்தார் 14

(வேறு)

உருளும் உலகில் ஒருவர்க் குரிய
பொருளும் சுகமும் புகழும் நலமும்
பெருகும் வளமும் பிறவும் இறைவன்
அருளைப்பெறவே அமைதல் நியதி 15

இறைவன் அருளைப் பெறவே அறிஞர்
முறைகள் பலவும் மொழிவார் எனினும்
கறைகள் கடியும் உளமோ டெளியர்
குறைகள் தவிரும் நெறியே முதலாம் 16

எளியர் குறைகள் தவிரும் வழியில்
வளரும் கலைகள் பலவும் உயர
ஒளிரும் கதிராய் உலகில் விரிய
மிளிரும் பெயல்கள் விழையும் அழகா 17

(வேறு)

குடியிருந்த மாளிகையைத் தந்தார்—கல்விக்
    கோட்டையெனக் கோட்டையூரைச் செய்தார்
செடிவளர்க்கும் நீரெனவே நின்றார்—கல்விச்
    செடிமரமாய் ஓங்க வகை செய்தார் 18

உள்ளபொருள் அத்தனையும் தந்தார்—கல்வி
    உயரவெனத் தொண்டியற்றி வந்தார்
கள்ளமிலா துள்ளமுடன் என்றும்—கல்வி
    காக்குமொரு காவலனாய் நின்றார் 19

மாசறவே தொண்டுபல செய்தால்—இந்த
வாழ்விலுயர் அன்புவந்து சேரும்
ஈசனருள் தேடியருள் கூடும்—தொண்டே
ஈசன்மய மானதொழில் அன்றோ? 20

(வேறு)

நினைவெலாம் தொண்டாய் மாறி
நீள்நிலத் துள்ளோர் யார்க்கும்
தினையள வேனும் துன்பம்
சேர்ந்திடா வகையைக் காண
வினையினைச் செய்த தொண்டர்
மேன்மைசேர் அழகன் நாமம்
புனிதமோ டொளிரும் இந்தப்
புவியெலாம் போற்றி நிற்கும் 21

(வேறு)

உலகினிலே தொண்டரெல்லாம் ஓங்கி வாழ்க
உரமுடைய செயல்வீரர் உவந்து வாழ்க
கலைபலவும் வளர்க்கின்ற கலைஞர் வாழ்க
கற்பனையூர் சுற்றிவரும் கவிஞர் வாழ்க
நிலையுயர வழிகோலும் அறிஞர் வாழ்க
நெஞ்சினிலே அன்புருகும் நேயர் வாழ்க
தலைமகனும் அழகனுயர் நாமம் வாழ்க
தாரணியில் உள்ளஉயர் வெல்லாம் வாழ்க 22

# 36. அழகன் ஒரு வள்ளல்

(கவிஞர் சொ. சொ. மீ. சுந்தரர், எம். காம்., தேவகோட்டை)

## தமிழ் வணக்கம்

வான்பாடும் சீர்பெற்ற வள்ளல் அழகனையே
நான்பாட வந்தேன் நலமுறவே—நான்பாடச்
செந்தமிழே! தாயே! திருக்குறளைத் தந்தவளே!
பைந்தமிழே நீ கடைக்கண் பார் 1

சந்தம் அறியேன் தமிழறியேன் ஆனாலும்
வந்துள்ளேன் வள்ளல் வளம்பாட—சந்ததமும்
வல்லான் அழகன் வளர்த்த கொடை சொன்னால்
கல்லுமெழு தாதோ கவி? 2

கல்வி வளரக் கலைவளரக் கல்லாதார்
அல்லல் அகல அறம்வளர்த்தான்—தொல்புவியில்
மங்காத வண்மை வளஞ்சேர் அழகப்பன்
பொங்குகொடை பொன்றுப் புகழ் 3

மக்கள் நிலையுயர மாண்புயரக் கல்விக்கே
மிக்க பொருளீந்து மேலானான்—இக்கொடைபோல்
மண்ணுலகில் செய்த மனிதரிலை என்றுரைக்க
அண்ணலாய் வாழ்ந்தான் அழகு 4

கல்விப் பயிர்தன்னைக் காத்திருந்தான்; கல்லாதார்
அல்லற் களையை அழித்தொழித்தான்;—பல்பணியும்
போற்றப் புரிந்தான்; புவியெல்லாம் காத்தளிக்கும்
ஆற்றல் உடையான் அழகு 5

கற்ருேர்க் களித்தும்பின் கல்லாரும் கற்றுணர
வற்ரு பழைபோல் வளப்பொழிந்தும்—மற்ருேர்
துயராற்ற வேண்டித் தொடர்ந்து பொருளீந்தும்
அயராத வள்ளல் அழகு 6

எண்ணிக் கொடாமல் இலக்கங்கள் எத்தனையோ
நண்ணிக் கொடுத்து நலஞ்செய்தான்—திண்ணமுடன்
கொள்ளுங்க ளென்றே குறையாது செங்கையால்
அள்ளிக் கொடுத்தான் அழகு 7

தண்ணுர் தமிழளித்த தார்வேந்தன் பாரியுந்தன்
எண்ணவொணுப் பேர்பறம்பை ஈயவில்லை-மண்ண
தானுறையும் வீட்டினையும் தந்தான் அழகப்பன் [கத்தே
வானேரும் போற்ற மகிழ்ந்து 8

தந்த பொருளுக்கும் சார்ந்த புகழுக்கும்
இந்த உலகில் இணையுண்டோ?—சொந்தமென
நாடெல்லாம் போற்ற நலமீந்தான் நம்மழகன்
காடெல்லாம் கல்லூரி கண்டு 9

“இன்னும் பிறந்தால் இவண் பிறக்க” என்று தமிழ்
அன்னை விரும்ப அறஞ்செய்தான்—மன்னுலகில்
நில்லாப் பெயரை நிலைசெய்து செந்தமிழின்
சொல்லால் வளர்த்தான் தொடர்ந்து 10

கல்வி ஒளிகாணக் காட்டகத்தே கல்லூரி
செல்வப் பொழிவதனுல் செய்தமைத்து—நல்லழகன்
தக்கபணி செய்தான் தமிழ்போலத் தான்நிலைத்து
மிக்கபுகழ் பெற்ருன் விரைந்து. 11

பாம்பாடும் காட்டிற்காற் பந்தாடச் செய்தறிஞர்
தாம்பாடப் பெற்ருன் தமிழிசையால்—நாம்பாடும்
தேயாத சீரினையும் தேய்ந்தழிந்த மெய்யினையும்
வாயார நெஞ்சே! வழுத்து!! 12

கல்வி வளர்த்தான் கலைவளர்த்தான் வற்ருது
செல்வம் பொழிந்து திருவளர்த்தான்–தொல்புகழ்சேர்
பேர்வளர்த்தான் இந்தப் பெரும்புவியில் மாயாத
சீர்வளர்த்தான் உள்ளம் சிறந்து 13

வண்மை அழகன் மலர்ந்த நினைவழகன்
திண்மை விரும்பும் திருவழகன்–உண்மைப்
புகழழகன் என்றே புவியறிஞர் போற்றி
அகவழகன் என்பர் அறிந்து. 14

காடு கெடுத்த கரிகால் வளவனிலும்
பீடு நிறைந்து பெயர்பெற்ருன்—தேடியதன்
செல்வத்தைப் பெய்து சிறந்தான் அழகப்பன்
கல்வி வளர்த்தான் கனிந்து. 15

பான்மணம் மாருத பச்சைக் குழந்தைகட்குத்
தான்மணம் தந்து தகவளித்தான்—வான்புகழ
மாண்டிசோர் பள்ளி வகுத்தான் செயலழகன்
நீண்டபுகழ் பெற்ருன் நிறைந்து. 16

வேதியலுக் கீந்தான் விரைந்தே அமைச்சரிடம்
பாதி யிரவில் பணமளித்தான்—மாதர்
குறையாது கற்கக் கொழுகொம்பாய் நின்றே
நிறையக் கொடுத்தான் நிதி 17

(வேறு)

சென்னைப் பல் கலைக்கழகம் சிறந்து வாழச்
சிறப்பாக ஐயிலக்கம் அள்ளி யீந்தான்
அன்னையர்கள் குலம்கல்வி பெற்று வாழ
அழகாகக் கல்லூரி அமைத்து வைத்தான்
தென்னாட்டில் பெருவணிகர் கழகம் வாழச்
சிறப்பான இடமீந்தான்; திருவி தாங்கூர்
நன்னாட்டில் தமிழுக்கோர் புலவர் வாழ
நலமீந்தான் திறலீந்தான் நன்மை தந்தான் 18

வியன்தமிழில் நல்லகலைக் களஞ்சி யத்தை
வெளியிடவென் றுயிரமாய் அள்ளி யீந்தான்
புயற் கொடுமை நீக்கிடவே கொச்சி நாட்டில்
புயலுதவி நிதியீந்தான்; மருத்து வத்தால்
பயன்பெற்றுப் பலர்வாழத் தமிழர் நாட்டில்
பலவிடத்தும் பொருளீந்தான்; செட்டி நாட்டுச்
செயலரசன் பொறியியற்கல் லூரி தன்னைச்
செழிப்பாக்க ஐயிலக்கம் தந்தான் வாழ்க! 19

# 37. அழகன் ஓர் அருளாளன்

(கவிஞர் அரு. சோமசுந்தரன்; தேவகோட்டை)

### அழகப்பன் பண்பு

வழங்குவதில் வள்ளல்நீ வளர்பணியில் தொண்டன்நீ
பழகுவதில் கலைஞன்நீ பண்புநெறித் தலைவன்நீ
குழந்தைமுதல் அறிவூட்டும் குணங்கல்வி யாளன்நீ
அழல்வீசும் போருலகில் அருளாளன் ஒருவன்நீ. 1

### கல்வி அழகன்

கல்விக் கூடம் கட்ட அழகன்
கருத்துக் கொண்டு விட்டான்
அள்ளி அள்ளிப் பணத்தை எல்லாம்
அதற்கி றைத்து விட்டான்
பள்ளி செல்லாப் பால ரெல்லாம்
பட்டம் பெற்று விட்டார்.
வள்ளல் என்ற பட்டம் அந்த
அழகன் பெற்று விட்டான். 2

காட்டை எல்லாம் சீர்தி ருத்திக்
கட்ட டங்கள் கட்டி
மேட்டை எல்லாம் பண்ப டுத்தி
மேன்மை கொள்ளச் செய்து

தோட்டம் வைத்தான் சோலை வைத்தான்
தூய கல்விக் கூடம்
நாட்டி வைத்தான்; நமது வாழ்வின்
நலிவை ஓட்டி விட்டான் 3

பிஞ்சு மக்கள் வாழ்வு கொள்ளப்
பெரிய தொண்டு செய்தான்
தஞ்ச மென்று வந்த வர்க்குத்
தாள்ப ணிந்து நின்றான்.
கொஞ்ச மல்ல அழகன் செய்த
கொடைகள் சொல்லப் போனால்
நெஞ்சம் நெக்கு நெக்காய் மாறும்
நேய ருள்ளம் வாடும். 4

உள்ளம் கல்வி கல்வி என்றே
ஓதும் எந்தப் போதும்!
கள்ள மில்லாக் கையி ரண்டும்
காத்தி ருக்கும் ஈய!
பள்ளம் மேடு பார்த்த செல்வன்
பாதை மாற வில்லை!
வள்ளல் இறுதி மூச்சும் அருளை
வளர்த்து விட்டுப் போனான்! 5

## கோடை அழகன்

நாட்டி லெங்கும் கல்விக் கெனப்பணி
நாட்டினுய்—வழி—காட்டினுய்
பூட்டி யிருந்தநம் பெண்களுக் கும்கலே
போதித்தாய்– பல – சாதித்தாய் 6

ஈட்டும் செல்வம் அனைத்தையு மேநீ
இறைத்தாயே—பழி—குறைத்தாயே
வாட்டும் பல்பகை வளர்மதி யால்நீ
வதைத்தாயே—பிணி—சிதைத்தாயே. 7

உலகைக் காத்திடத் தோன்றிய மேதையாய்
உயர்ந்தாயே—அருள்—நயந்தாயே
பலவாய் நற்பணி செய்து தமிழ்க்கொடைப்
பாரியுமாய்—பொழி—மாரியுமாய்க் 8

காலம் விரும்பிடும் கருத்து நெறிப்படிக்
கடமைசெய்தாய்—பெரும்—மடமை கொய்தாய்
ஆலம் உண்டவன் அருள்நெறி காட்டினே
அழகப்பா—கொடை—அழகப்பா! 9

(வேறு)

அடுத்தவனின் சொத்துக்கே பிறரெல்லாம்
ஆசைகொளும் இந்த நாளில்
கொடுத்துயர்ந்த பெருந்தகையே! உலகமெலாம்
கொதிப்பேற மறைந்து விட்டாய்

படுத்தவர்கள் எழுந்திடவே பாராத
பழம்பெருமை படைத்த வையம்
கொடுப்பவர்க்கே அடிபணியும் என்றதொரு
கொள்கையினை விளக்கி விட்டாய். 10

### அழகப்பன் மறைவு

கலைவாழக் கூடம் பலகட்டி இங்கே
கல்விக்கே சேவை செய்தாய்
அலைவீசிச் செல்வம் பெருவாரி யாக
ஆண்டாண்டு வந்த போதும்
நிலையாது செல்வம் என்றேநீ கூறி
நீங்காத தொண்டு செய்தாய்.
மலைபோல நின்று பனிபோல மாய்ந்து
மறவாநீ எங்கே சென்றாய்? 11

உளமாரச் சேவை பலசெய்து மக்கள்
உள்ளத்தில் என்றும் வாழ்ந்தாய்
துளங்காது நாளும் தொண்டுக்கே ஓடித்
தோலாது வெற்றி கண்டாய்!
விளங்காத வள்ளல் தன்மைக்கு நந்தா
விளக்காக வந்து தித்தாய்.
வளங்காணா நேரம் வந்துற்ற போதும்
வண்மைக்கே எல்லை யானாய். 12

மலையாவில் மாய்ந்து தாய்லாந்தில் வீழ்ந்து
பர்மாவில் ஒய்ந்த மக்கள்
கலையாவும் தேய்ந்து பணம்யாவும் காய்ந்து
கல்விக்கும் வழிகள் இன்றி
வலையுற்ற மீனாய் வாழ்வின்றி வாட
வள்ளால்நும் சிந்தை நோவ
இலைபோட்டுக் கல்விச் சோறிட்டாய் எங்கள்
இதயத்தில் தெய்வ மானாய் 13

அருள்வாழ்வு நாட்டில் அருகிற்றே என்றோ
ஐயாநீ வந்து தித்தாய்?
பொருள்தேடும் ஆற்றல் புதையுண்ட தென்றோ
புதுப்பிக்க இங்கு வந்தாய்?
இருள்சூழ்ந்த நாட்டில் வள்ளன்மை ஏற்ற
எடுத்தாயோ பிறவி இங்கே?
மருளுற்ற மாந்தர்க் கறிவூட்ட என்றோ
மகனேநீ தோற்றம் கொண்டாய்? 14

கருத்தெல்லாம் பேசும் பேச்செல்லாம் மூச்சுக்
காற்றெல்லாம் கொடையே எண்ணும்
சிரித்தாலும் உள்ளம் சினந்தாலும் கொண்ட
சித்தத்தில் எண்ணம் ஒன்றே.
மரித்தாலும் உன்றன் மகத்தான தொண்டு
மனந்தோறும் வாழு திங்கே
எரித்தாலும் என்பு மறைந்தாலும் உன்றன்
எண்ணத்திற் கழிவு முண்டோ? 15

## கூற்றுவன் கொடுமை

தமிழக மாந்தரும் தரணியின் மாந்தரும்
தலைவனை இழந்தாரே—நம்
அமிழ்தினை அழகனை அருந்தவச் செல்வனை
ஐயகோ! மறந்தோமே—இவ்
இமிழ்கடல் வரைப்பினில் எண்ணில கோடியாம்
இத்தனை மக்களுள்ளே—சிறு
உமிகளை வைத்துநம் அழகனின் நல்லுயிர்
உண்டனன் கூற்றுவனே! 16

அமரரைக் கண்டஅக் காலனும் அழகனுக்
காசைகள் கொண்டானோ—நம்
விமலனும் அழகனின் கொடைத்திறம் அறிந்ததால்
வீறிட்டெ ழுந்தானோ-உயர்
சமரினுக் கஞ்சியே மறைந்திருந் தேஉயிர்
சதியினால் கொன்றானோ?—உடன்
தமரென உலகெலாம் தவித்திடக் கூற்றுவன்
தாகங்கள் தீர்த்தானோ? 17

கலையினுக் கொருவனைக் கண்மணி அனையனைக்
காலனுக் களித்துவிட்டோம்—நம்
தலைவருக் கணியினைத் தமிழகச் செல்வனைத்
தரையிலே வீழ்த்திவிட்டோம்—உயர்
மலைகளுக் குயர்ந்தவன் மதியினில் வளர்ந்தவன்
மண்மகள் புல்லிவிட்டான்—நாம்
அலைகடல் துரும்பெனத் தவித்திட ஆண்மகன்
அமரனாய் மாறிவிட்டான். 18

# 38. அழகன் ஒரு தலைவன்

(கவிஞர் என். இராகவன்; வானொலி; திருச்சி)

### தமிழ்த்தாய் வணக்கம்

நெஞ்சிலே பிறந்து நீங்கா
நினைவிலே வளர்ந்தென் நாவில்
கொஞ்சியே கவிதை இன்பக்
கூத்திடும் தமிழே இந்தப்
பஞ்சையை அரங்கி லேற்றிப்
பாவைக்கூத் தாட்டு கின்ற
வஞ்சியே! உயிரின் வாழ்வே!
வணங்கினேன்! நீயே காப்பே!!

எந்தம் அழகப்பர் ஏற்றமிகு நம்தலைவர்
தந்தப் பேழையெனில் தாரணியும் ஒப்புதடா!
கோடி கொடுப்பார் குடியிருக்கும் வீட்டினையும்
தேடும் பொருளினையும் சிற்றுயிரும் அர்ப்பணிப்பார்
ஆயுதம் இல்லையெனில் ஆயுதச் சாலைகளே
ஓயாமல் உற்பத்தி ஓங்கிடவே செய்திடுவார்
மாணவர்கள்எல்லோரும் இராணுவத்தில்சேர்ந்திடுவார்
மாணவியர் கூட மடங்கல்போல் வந்திடுவார்
ஆலைத் தொழிலாளி ஆனாலும் அன்னவரின்
சீலப் பணிக்குத் திரண்டிடுவர் ஒத்துழைப்பர்
நாட்டுத் தலைமையினை நானா துறைகளிலும்

காட்டி யிவண்வாழ்ந்த கலைவள்ளல் இன்றிருந்தால்
சீனு தனைவிலைக்குச் சென்றங்கே வாங்கிடுவார்
நானு வகைக்கல்வி நல்லாய்வுக் கூடங்கள்
நூலாலை யோடு நுண் கலையின் மாடங்கள்
காலாலே செய்து கையாலே உயர்த்திடுவார்!
எல்லாம் திருவி எதிரியந்தச் சீனர்களின்
பொல்லா மனத்தைப் புடம்போட்டே எடுத்திடுவார்
பேராசை மண்ணாசை போயொழியச் சீனர்கள்
தாராள வள்ளல் தனிச்சுவட்டைப் பின்பற்றி
ஈகைக் குணத்தால் இயன்றபெரும் தொண்டர்களாய்
ஓசையுடன் எம்முடனே உண்மைஉற வாடிடுவர்
தாம்பிடித்த மண்ணை நம் தாளடியில் சேர்ப்பித்துத்
தீமைச் செயலுக்குத் தேடிடுவர் ஓர்கழுவாய்!
உலகை உயர்வழியில் ஒழுங்காக நடப்பிக்கும்
அழகன் புகழே புகழ்!

## 39. அழகன் ஒரு வழிகாட்டி

(கருப்பட்டிக் கவிராயர்; காரைக்குடி)

### தமிழ்த்தாய் வாழ்த்து

எண்ணாகி எழுத்தாகி எதுகை மோனை
இயலுகின்ற சொல்லாகி இசையுங் கூத்துப்
பண்ணாகிப் பொருளாகி யாப்பு மாகிப்
பாவாகி அணியாகிப் பழமை தோன்றும்
விண்ணாகி எம்மொழியும் வியக்கும் வண்ணம்
விரிதமிழ்நூல் பலவீன்றும் புதுமை காட்டுங்
கண்ணாகிக் காலமெலாங் கன்னி ஆனாள்
கஞ்சமலர்ப் பொன்னடிகள் போற்றி வாழ்வாம் 1

## அழகன் வாழ்த்து

கள்ளிவளர் நிலந்திருத்திக் கழனி ஆக்கிக்
கல்விநிறை கலையுயரக் காக்கும் வேலி
பள்ளிஎனும் வரப்பமைத்துப் பண்பால் வெட்டிப்
பயன்கருதா அன்புவெளம் பாங்காய்ப் பாய்ச்சி
உள்ளியுள்ள பொருளனைத்தும் உரமாய்க் கொட்டி
உயரறிவுப் பயிர்செய்த உழவர் கோமான்
வள்ளலுக்கே பொருளான அழகன் தன்னை
வாழ்த்தாத நாளெல்லாம் வாழா நாளே. 2

(வேறு)

திருமகளின் அருளழகன் செந்தமிழின் நாவழகன்
கருவினிலே திருவழகன் கலைதெளிந்த அறிவழகன்
கல்லாக் கொடையழகன் கலங்கா மனவழகன்
நில்லா உலகத்தின் நிலையாமை கண்டுணர்ந்தான்
ஆண்டுதொறும் கல்லூரி அடுத்தடுத்துத் தோற்றுவித்த
நீண்டபுகழ் அழகப்பன் நினைவுற்றால் வள்ளல்நான்!
வாழ்வென்னும் சிறுபடகு வளமாகச் செல்லுதற்குத்
தாழ்வில்லா நெறியுணர்த்தும் தக்கஒரு வழிகாட்டி;
வணிகத்துத் துறைவாழ்வார் வரவறிந்து செலவுசெயும்
துணிவுடையார் எனக்கூறும் தொல்முறையின் வழிமாற்றி
வரவு வரு முன்னே மாண்பாரும் கல்விக்கே
உரிமையுடன் செலவெழுதி உவந்தளித்த வழிகாட்டி
அக்காலம் எழுவள்ளல் அழிகின்ற பொருளீந்தார்;
இக்காலம் இவ்வள்ளல் இணையில்லா நிலைப்பொருளாம்
வெள்ளத்தால் அழியாத வெந்தழலால் வேகாத

கொள்ளத்தான் இயலாத கொடுத்தாலும் குறையாத
ஒப்பரியபெரும்பொருளாம் உயிர்சிறக்கும்நற்பொருளாம்
செப்பரிய கல்விக்கே சேர்த்தபொருள் அத்தனையும்
குன்றனைய பெருநிதியும் குடியிருந்த ஒருவீடும்
மன்னுகலைக் கோயிற்கே வழங்கிவிட்ட வழிகாட்டி!
இறைமணமும் இசைமணமும் இசைந்தோங்கும் நெறி
[முறையே
இறையுணர்ந்த ஆழ்வார்கள்,இலக்குணர்ந்தஅடியார்கள்
நடமாடும் கோயிலென நாடெல்லாம் சுற்றி வந்து
படமாடும் கோயிற் பரமனுக்குப் பணிசெய்தார்
இத்தயை தொண்டாலே இவ்வுலக உயிரினங்கள்
உத்தமமாம் நிலைபெற்றே உயர்ந்தோங்க வழிசெய்தார்.
என்கடனே பணிசெய்து கிடப்பதுவே என்றபெரும்
நன்மொழியை உளங்கருதி நாட்டிற்கும் மக்களுக்கும்
பணிசெய்தால் அப்பணியே பரமனுக்கும் உரியதெனத்
துணிவாகக் கெண்டதனுல் தொல்வழியை மறவாமல்
மாக்களையும் மக்களென மாற்றுகின்ற பெருங்கருவி
வாக்கான கல்விதனை வளர்க்கின்ற கலைக்கூடம்
உருவாக்கும் செயலொன்றே ஒப்பற்ற பணியாக
அருள்பூத்த உளங்கனிய ஆற்றிநின்ற அழகனுமே
தெளியாத உலகிற்குத் தெரிவிக்க முன்னேடி
வழிகாட்டி யாய்நின்ருன் வந்து.



# கவிஞர் அரு. சோமசுந்தரன் நூல்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | கவியரங்கில் கவிஞர் சோமசுந்தரன் | (கவிதை) | ரூ. | 1—75 |
| 2. | கவிஞர் சோமசுந்தரன் கவிதைகள் | ( ,, ) | ரூ. | 3—50 |
| 3. | திருமுறைகள் வீட்டுநூல் | ( ,, ) | ரூ. | 3—50 |
| 4. | சிறுவர்க்கு விஞ்ஞானம் | ( ,, ) | ரூ. | 1—50 |
| 5. | பக்திப் பாக்கள் | ( ,, ) | ரூ. | 2—00 |
| 6. | திருவள்ளுவர் பிள்ளைத்தமிழ் | ( ,, ) | ரூ, | 1—50 |
| 7. | வேலின் முனை | (நாடகம்) | ரூ. | 2—00 |
| 8. | கடமை | ( ,, ) | ரூ. | 2—00 |
| 9. | தியாகக் குடும்பம் | ( ,, ) | ரூ. | 1—75 |
| 10. | முகமூடி | ( ,, ) | ரூ. | 2 00 |
| 11. | செக்கிழுத்த செம்மல் | ( ,, ) | ரூ. | 1 75 |
| 12. | உயர் கல்வி தந்த உத்தமர்கள் | (வாழ்க்கை) | ரூ. | 1-50 |
| 13. | பெருந்தொழில் வளர்த்த பெரியோர் | ( ,, ) | ரூ. | 1—75 |
| 14. | நாடு புகழும் ஜி. டி. நாயுடு | ( ,, ) | ரூ. | 1—75 |
| 15. | மாவீரன் நெப்போலியன் | ( ,, ) | ரூ. | 1—50 |
| 16. | பாரதப் பிரதமர்கள் | ( ,, ) | ரூ. | 2—00 |
| 17. | வள்ளல் அழகப்பர் | ( ,, ) | ரூ. | 1—50 |
| 18. | தீந்தமிழ் இலக்கியத் தேன் | (கட்டுரை) | ரூ. | 3—00 |
| 19. | கட்டுரைப் பெட்டகம் | ( ,, ) | ரூ. | 2—00 |
| 20. | கட்டுரைக் கற்கண்டு | ( ,, ) | ரூ. | 1—00 |
| 21. | கட்டுரைக் கற்பகம் | ( ,, ) | ரூ, | 2—00 |
| 22. | உளவு நங்கை | (நாவல்) | ரூ. | 3—75 |
| 23. | சர்க்கஸ் பேரரசி | ( ,, ) | ரூ. | 3—00 |
| 24. | இரண்டாம் ரிச்சர்டு | ( ,, ) | ரூ. | 1—50 |
| 25. | விழைந்த வண்ணமே | ( ,, ) | ரூ. | 2—00 |
| 26. | மாக்பெத் | ( ,, ) | ரூ. | 2—00 |
| 27. | புயல் | ( ,, ) | ரூ. | 2—00 |
| 28. | விடுதலை வேட்கை | (சிறுகதை) | ரூ. | 1—50 |
| 29. | சேர்ந்து வாழ்வோம் | ( ,, ) | ரூ. | 1—00 |
| 30. | ஆங்கில அருங்கதைகள் | ( ,, ) | ரூ. | 1—00 |
| 31. | சீனப் படையெடுப்பு | (வரலாறு) | ரூ. | 3—00 |
| 32 | பாகிஸ்தான் படையெடுப்பு | ( ,, ) | ரூ. | 2—00 |

பொன்முடி பதிப்பகம்;

151, செக்காலை ரோடு, காரைக்குடி-1. (Rd. Dt.)

தி சௌத் இந்தியா பிரஸ், காரைக்குடி.